Regd. M. No. 5934 | Phone No. 21841

# ஜனசக்தி

JANASAKTHI

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்

(வெளியூர் பதிப்பு)

மலர் 16 இதழ் 55] | சென்னை 10-10-59 விகாரி ஆண்டு புரட்டாசி மீ 24உ சனிக்கிழமை | [4 பக்கங்கள் 7 காசுகள்

# கவிஞர் கல்யாணசுந்தரம் அகால மரணம்!

தலையங்கம்

## அந்தோ! பாடல் மேதை மறைந்தான்

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் திடீர் மறைவு தமிழ் உலகத்தைப் பேரதிர்ச்சியில் தள்ளி, ஆருத் துயரத்தில் ஆழ்த்தும். பட்டுக்கோட்டை திரைப்படத் துறையில் தமிழக வரலாற்றில் கோடிக்கணக்கான மக்களைத் தேன் குடித்த நரி போன்று சொக்கவைத்த தன்னேரில்லாத தனிப்பெரும் பாடலாசிரியன். சராசரி தமிழனின் இதயத் துடிப்பின் ஒப்பற்ற பிரதிநிதியாக நின்று தெள்ளிய, உயிர்ச்சத்து மிக்க பழகு தமிழில் கலை மெருகு சொட்ட பாடல் மழை பொழிந்த வள்ளல் பட்டுக்கோட்டைக்கு நிகர் எவருமில்லை என்பதை எல்லோரும் ஒப்புவர். சென்ற இரண்டாண்டுகளில் பட்டுக்கோட்டை கவிஞன் வழங்கிய பாடல் அமுதும், பெற்ற வளர்ச்சியும் யாருக்கும், வியப்பும் திகைப்புமளிக்கும்.

29 ஆண்டுகளே நிறைவுள்ள அந்த இளைஞனிடம் தொண்ணூறும் பத்தும் தாண்டிய ஓர் முதிர்ந்த சான்றோனின் உள்ளம் முத்துக் கனிந்து வளங்கிற்று. எல்லோரும் மனமார நேசித்து அளவளாவும் நற்பண்பும், புன்முறுவலும் அவனிடம் திகழ்ந்தன.

காசு அவன் காலடியில் வந்து குவிந்தது. ஆயினும் காசுக்காகக் கலையை விற்காத கவிஞன் அவன்.

பாட்டாளி மக்களிடமும், கம்யூனிஸ்ட் கட்சியின்பாலும் சோவியத் சோஷலிஸ்ட் நாடுகள் மீதும் பட்டுக்கோட்டைக்கு இருந்த அசையாத அன்பின் பெருக்கு எல்லையற்றது. தமிழ்ப் பெருமக்கள் பட்டுக்கோட்டையினிடம் தங்கள் கவிஞனை அண்மைக் காலத்தில் மென்மேலும் கண்டுவந்தார்கள். திரைப்பட உலகில் படாதிபதிகளிலிருந்து அடித்தட்டு ஊழியர்கள் வரையில் எல்லோரும் கட்சி, கருத்து வேற்றுமைகளைத் தாண்டி அன்பு சொரிந்த கவிஞன் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்.

தமிழ்த் தொண்டுக்கும் மக்கள் பணிக்கும் பட்டுக்கோட்டையின் முன் திறந்து கிடந்த எதிர்காலம் மிகமிகப் பெரிது. கலைத் துறையில் எல்லோருடைய நெஞ்சங்களையும் அள்ளிய அந்த உதயபானு அந்தோ! அஸ்தமித்துவிட்டது. கலைவாணர் என். எஸ். கே.க்குப் பின் தமிழ்ப்பெரு மக்களை ஆருத்துயரத்தில் தள்ளிய சோக நிகழ்ச்சி இது என்று கூறுவது எவ்வளவும் பொருந்தும். அருமந்தன்ன கவிஞர் பட்டுக்கோட்டையின் மறைவு அவர் குடும்பத்தார்க்கு நஷ்டம்; அதைவிட திரைப்பட, நாடக உலகுக்கு நஷ்டம்; அதைவிட கம்யூனிஸ்ட் கட்சிக்கும் தமிழ்ப்பெரு மக்களுக்கும் நஷ்டம்.

பிரிவாற்ருமையால் வாடும் அவர் குடும்பத்தாரோடும், தமிழ்ப் பெருமக்களோடும் நாம் மனப்பூர்வமாகப் பங்கு கொள்கிறோம், அந்தக் கலை வள்ளலுக்கு 'ஜனசக்தி' தனது பணிவன்பான இறுதி வணக்கத்தையும் தெரிவிக்கிறது.

## ஈடு செய்ய முடியாத பேரிழப்பு

### மக்கள் கவிஞருக்கு சென்னை மக்களின் உருக்கமிகும் அஞ்சலி

சென்னை, அக். 8—

தமிழகத்தின் தலைசிறந்த முற்போக்குக் கவிஞரான தோழர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் அவர்கள் இன்று மாலை சுமார் 4½ மணிக்கு சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் காலமானர் என்னும் நெஞ்சுபிளக்கும் துக்கச் செய்தியை ஆருத்துயரோடு, அளவு கடந்த வேதனையோடு தெரிவித்துக் கொள்கிறோம்.



பல்லாயிரக்கணக்கான மக்கள் பலத்த கரகோஷம் செய்து வரவேற்றனர்

சில நாட்களுக்கு முன்பு மூக்கில் ஏதோ நோய் காரணமாக 'ஆபரேஷன்' செய்யப்பட்டு குணமடைந்து வந்தார். ஆனால் திடீரென்று இன்று காலையின் மூக்கில் மீண்டும் உபத்திரவம் ஏற்பட்டு, இரத்தம் கொட்டவே உடனே ஜெனரல் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டார் அங்கே அவருக்கு ரணசிகிட்சை முதலியவை செய்யப்பட்ட போதிலும் எதுவும் பயன்படாமல் மாலையில் உயிர் நீத்தார்.

பசுமரத்தில் இடிவிழுந்தது போன்ற இந்த செய்தி கேட்டதும் கம்யூனிஸ்ட் தலைவர்கள் எம். ஆர் வெங்கட்ராமன், ப ஜீவானந்தம், கே. முத்தையா மற்றும் நூற்றுக் கணக்கான கம்யூனிஸ்ட் ஊழியர்கள் அவரது இல்லம் சென்று மறைந்த மக்கள் கவிஞருக்குத் தங்கள் இறுதி மரியாதை செலுத்தினர். இதற்குள்ளாக செய்தி நகரமெங்கும் பரவவே, திரைப்படத்தொழிலதிபர்களும், கலைஞர்களும், ஏனைய அரசியல் கட்சித் தலைவர்களும், அன்பர்களும் உள்ளம் துடிதுடித்து, கண்ணீர் மல்க சாரிசாரியாக விரைந்து வந்து கவிஞருக்குத் தங்கள் இறுதி வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டனர். மாலை 5.30 மணி முதலே அவரது இல்லத்தின் முன்பு ஏகமாக ஜனத்திரள் கூடிவிட்டது ஒவ்வொருவர் உள்ளத்திலும் அருஞ்செல்வத்தை இழந்து விட்டோமென்று ஏக்கம்; சர்வ சதாவும் புன்சிரிப்புத் தவழும் அந்த இனிய முகத்தை இனி எப்போது காணப் போகிறோம் என்று கணகளிலே நீர்த்திரை. பலர் அவரது பிரேதத்தைக் கண்டதும் வாய்விட்டுக் கதறிவிட்டனர். இந்த சோகக் காட்சிகளெல்லாம் அனலிலிட்ட பட்ட மெழுகு போல உள்ளத்தை உருக்குவதாக இருந்தது

#### ஈடுசெய்ய முடியாத நஷ்டம்

அவரது அகால மரணம் ஈடு செய்ய முடியாத மாபெரும் நஷ்டம். ஔவை டி. கே. சண்முகம் அவர்கள் கூறியது போல அவரது பிரிவு திரை உலகிற்கு மட்டுமன்றி, தமிழ்நாடு முழுவதற்குமே பேரிழப்பு. இப்போது அவருக்கு 29 வயது தான் ஆகிறது. இந்த இளம் வயதுக்குள்ளாக திரை உலகிலே அவர் மிகஉன்னத இடத்தைப் பெற்றுவிட்டார். அண்மை வருடங்களில் அவர் பாட்டு எழுதாதத் திரைப் படங்களே கிடையாது. எந்தத் திரைப் படம் வெற்றி அடையவேண்டுமானலும் அவரது பாட்டுகள் அவசியம் அதில் இடம்பெற வேண்டும் என்னும் நிலையை ஏற்படுத்தி விட்ட பெருமை அவரைச் சார்ந்தது.

#### கருத்துச் செறிந்த பாடல்கள்

அவரது பாடல்கள் உணர்ச்சியற்ற வெறும் எழுத்துக் கோர்வைகளல்ல. அதற்குப் பதில் எளிமையானவை; கருத்துச் செறிந்தவை; கற்பனை நிறைந்தவை. இதனால் அவரது பாடல்கள் தமிழகமெங்கிலும் லட்சக்கணக்கான இல்லங்களிலும் உள்ளங்களிலும் ரீங்காரம் செய்கின்றன. அதிலும் அண்மை காலத்தில் வெளியான 'நாடோடி மன்னன்' 'கல்யாண பரிசு' முதலிய படங்களில் அவரது பாடல்கள் மிகவும் பிரசித்தமானவை. இந்த இரண்டு படங்களிலும் அவர் இயற்றிய பாடல்களுக்காகப் பெரிதும் பாராட்டப்பட்டு கேடயங்கள்பெற்ருர். 'தூங்காதே தம்பி தூங்காதே' "சின்னச் சின்ன இழை பின்னி" "உன்னைக் கண்டு நானாட" "கதிராடும் கழனியில்", 'முகத்தில் முகம் பார்க்கலாம்' என்பது போன்ற அவரது ஏராளமான பாடல்கள் இன்றும் நாடு நகரங்களிலும் பட்டி தொட்டிகளிலும் எதிரொலித்துக்கொண்டிருப்பதைக் கேட்கலாம்.

#### விவசாயி மகன்

தோழர் கல்யாணசுந்தரம் பட்டுக்கோட்டை தாலுகா சங்கன் படைத்தான் நாடு என்னும் கிராமத்தில் எளிய ஒரு விவசாய குடும்பத்திலே பிறந்தவர். தகப்பனர் எஸ். ஆர் அருணசலம் பிள்ளை. தாயார் விசாலாட்சி அம்மாள் அவரதுதந்தையாருக்கு பாடல்கள் இயற்றும் பழக்கமுண்டு ஆகவே இத்தகைய குடும்பத்திலே வந்த அவர் சிறுவயது முதலே கவிஞராக விளங்கியதில் ஆச்சரியமில்லை. பிஞ்சு பிராயத்திலேயே விவசாய மக்கள் படும் துயரத்தைப் பற்றி உள்ளம் உருக்கும் பாடல்களை இயற்றினர். இந்தத் துறையிலே அவருக்கிருந்த ஆர்வம் நாடக உலகிலே அவரை அடியெடுத்து வைக்கும்படி செய்தது சக்தி நாடக சபையில் சிவாஜிகணேசன் என் தங்கை நடராஜன் நம்பிராஜன் முதலியோர் இருந்த காலத்தில் அவர் அக்கம்பெனியில் பாடல்கள் இயற்றி சொல்லித் தந்ததோடு, சில வேடங்கள் போட்டும் நடித்து வந்தார்.

#### இரண்யனின் தோழர்

தோழர் கல்யாணசுந்தரம் என்றுமே முற்போக்கு உள்ளம் படைத்தவர். உழைப்பாளர். மக்கள் பால் பேரன்பு கொண்டவர் இந்த மக்கள் உய்யும் உயர்வும் அடைய வேண்டுமென்றும் துடிப்புக் கொண்டவர். இதனல் சிறுவயது முதலே விவசாய இயக்கத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டார். தஞ்சை ஜில்லாவின் ஒப்பற்ற விவசாயப் புதல்வர்களான தியாகிகள் இரண்யன், சிவராமன் ஆகியோர்களின் தோழராக இருந்து விவசாய இயக்கத்தில் பெரிதும் பாடுபட்டவர்.

#### கண்ணின் மணிகள்

1955-ல் சென்னையில் அகில இந்திய சமாதான மகாநாடு நடைபெற்ற போது திரைப்படக் கலைஞர் ஆர். எஸ் மனேகர் நடித்த ஒரு கலை நிகழ்ச்சியில் அற்புதமாகப்பாடல்களை எழுதி அனைவர் உள்ளங்களையும் கவர்ந்தார். பிறகு திண்டுக்கல்லில் நடைபெற்ற தமிழ்நாடு விவசாயிகள் மகாநாட்டில் தோழர் டி. கே பாலச்சந்திரனும், என். என். கண்ணப்பாவும் நடத்திய 'கண்ணின் மணிகள்' நாடகத்திற்குப் பாடல்கள் எழுதினர். நடிக்கவும் செய்தார் இந்த உணர்ச்சிமிக்க கருத்துச் செறிந்த பாடல்களைக் கேட்டு அங்கு குழுமியிருந்த பல்லாயிரக்கணக்கான மக்கள் பலத்த கரகோஷம் செய்து வரவேற்றனர்

#### ஜனசக்தி தூண்டியது

இத்தகைய ஒரு சிறந்த கவிஞர் குடத்திலிட்ட விளக்கு போல் பிரகாசிக்காமல் இருப்பதா என்று ஜனசக்தி அவரது அருமையான பாடல்களை அவ்வப்போது பிரசுரித்து, குன்றில் இட்ட விளக்கு போல் பிரகாசிக்கச் செய்தது. 'ஜனசக்தி'யில் வெளியான கருத்து வளமும் கற்பனை உரமும் கொண்ட இந்தப் பாடல்களைக் கண்டு திரைப்பட உரிமையாளர்கள் அவரது அருந்திறனை உணர்ந்தனர். இதற்குப்பிறகு வரிசையாக பல படங்களுக்குப் பாடல்கள் எழுதும் அரியவாய்ப்பு அவருக்குக் கிட்டியது. இந்த வாய்ப்பினை உபயோகித்து, அவர் மின்னல் வேகத்தில் புகழேணியில் ஏறினர் எண்ணற்ற இன்னல் இடுக்கண்களுக்கிடையேயும் உழைப்பாலும் சுயமுயற்சியாலும் லட்சியத் தெளிவாலும் ஒருவன் எந்த நிலைக்கு வரமுடியும் என்பதற்கு அவர் முன்னுதாரணமாகத் திகழ்ந்தார்.

அதேசமயம் உழைப்பாளர் விவசாய இயக்கத்தையும், முற்போக்கு லட்சியத்தையும் அவர் மறந்துவிடவில்லை. கம்யூனிஸ்ட் கட்சியோடு நெருக்கமான உறவு கொண்டார் கட்சியின் லட்சியத்தில் அசையாத நம்பிக்கை கொண்டார். கட்சியின் அரவணைப்பில் மக்கள் கலையை வளர்ப்பதில் பேரார்வம் காட்டினர் காரைக்குடி மகாநாட்டின் அமைக்கப்பட்ட கட்சியின் கலைக்குழுவில் பிரதானமாக அங்கம் வகித்தார் அந்த மகாநாட்டிற்கு அவர் எழுதி அனுப்பிய வாழ்த்துச் செய்தியில் "கலை வளர்க்க நம் கட்சி முழு முயற்சியிலீடுபட முன்வந்திருப்பதைக் கண்டு மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன். இந்த வகையில் கட்சி எனக்கு எந்தப் பொறுப்பை அளித்தாலும் அதை நிறைவேற்றத் தயாராக இருக்கிறேன்" என்று குறிப்பிட்டிருந்தார்.

அவருக்கு மனைவியும் ஒரு குழந்தையும் தாய்தந்தையரும் சகோதரரும் இருக்கிருர்கள்.

தோழர் கல்யாணசுந்தரம் அன்பே உருவானவர்; நட்புக்கு இனியவர், தன்னடக்கம் கொண்டவர்.

இத்தகைய ஒரு லட்சிய வீரருக்கு, மக்கள் கவிஞருக்கு, பாடல் இயற்றும் மேதைக்கு தமிழ்நாடு கம்யூனிஸ்ட் கட்சி செங்கொடி தாழ்த்தி அஞ்சலி செலுத்திக் கொள்கிறது.

தோழர் கல்யாணசுந்தரத்தின் திருநாமம் நீடூழி வாழ்க!

### இன்று காலையில்

சென்னை, அக் 9—

இன்று காலையில் ஏராளமான திரைப்பட நடிகர்களும், நடிகைகளும், இதர கலைஞர்களும், கம்யூனிஸ்ட் கட்சி, தொழிற்சங்கத் தலைவர்களும், தொழிலாளர்களும், "ஜனசக்தி" அலுவலக, ஆசிரியர் குழுத் தோழர்களும், பொதுமக்களும் மறைந்த கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் வீட்டுக்குச் சென்று துக்கம் விசாரித்தனர். புன்முறுவலுடன் காட்சியளிக்கும் அவர் உருவத்தைக் கண்டு அஞ்சலி செலுத்தினர்.

காலை 9 மணி அளவில் பிராட்வே ஹார்பர் தொழிலாளர் சங்கத்திலிருந்து, தொழிலாளர்கள் அரைக் கம்பில் பறக்கும் செங்கொடிகளுடன் ஊர்வலமாகச் சென்று மறைந்த கவிஞர் திலகத்திற்குத் தங்கள் அஞ்சலியைத் தெரிவித்தனர்.

### ஏன் மறைந்தாய்?

(ஈரோடு பாலகுரு)

கலையுலகில் அழியாத மானதங்கம்
சற்றையின் உச்சியிலே நடந்த சிங்கம்
கலைஞர்களின் சிந்தைகளை உறங்கவைத்து
கல்யாண சுந்தரம்நீ ஏன்மறைந்தாய்?

பாமரரின் குரலோடு ஒன்றுபட்டாய்
பாட்டாளி வர்க்கத்தார் வாழ வாழ்ந்தாய்
பதுமைகளை மொழியாலே பேசவைத்தாய்
பாவலனே! காவலனே! ஏன்மறைந்தாய்?

பழத்துள்ளே ஊசிசெலும் பான்மைபோல
பழந்தமிழை உன்வழியே இழுத்து வைத்தாய்
குளத்தழகு தாமரையால் என்றுசொல்வார்
கொள்கைக்கே அழகுதந்தோன் ஏன்மறைந்தாய்?

அறிவாலும் அறத்தாலும் வளர்ந்த செல்வா!
அன்பாலும் பண்பாலும் சிறந்த செல்வா!
சிரிப்பாலும் குறிப்பாலும் உணர்த்தும் செல்வா!
செந்தமிழை வளர்த்தோனே ஏன்மறைந்தாய்?

தூங்காதே தம்பியெனத் துயில் எழுப்பி
தூயவனே! நீமட்டும் தூங்கலாமா?
தாங்கஇதை இதயங்கள் ஏது தோழா?
தமிழ்மலரே! கலைமறந்து ஏன்மறைந்தாய்?

## போர் துவக்கத் துடிப்பது விவேகமற்றது

### சமாதானத்திற்கு ரஷ்யா சகல முயற்சியும் எடுக்கும்

#### விளாடிவாஸ்டாக்கில் குருஷ்சேவ் பேச்சு

மாஸ்கோ, அக். 8—

சேவல் சண்டைக்குத் துடிப்பதுபோல் வல்லரசுகள் போரை விரும்புவது நியாயமற்றது என்று சோவியத் பிரதமர் குருஷ்சேவ், விளாடிவாஸ்டாக்கில் நடந்த ஜனசமுத்திர கூட்டமொன்றில் அறிவித்தார். பீகிங்கில் சீன தலைவர்களுடன் பேசிவிட்டு திரும்பும்போது விளாடிவாஸ்டாக்கில் குருஷ்சேவ் பேசினர்.

குருஷ்சேவ் கூறியதாவது:— உலகம் முழுவதிலும் நிரந்தரமான சமாதானத்திற்கு உத்தரவாதம் ஏற்படவேண்டும். அந்நோக்கத்துடன் அமெரிக்கருடன் உடன்பாடு காண சோவியத் யூனியன் பொறுமையுடனும் உறுதியுடனும் முயற்சி எடுக்கும்

சமுதாய அமைப்பு முறைகள் விஷயத்தில் அமெரிக்கர்களுடன் நாம் ஒத்துபோக முடியாது. அமெரிக்கர் முதலாளித்துவ முறையின் கீழ் வாழட்டும். நாம் கம்யூனிஸத்தின் கீழ் வாழ்வோம். யார் கை உயர்ந்திருக்குமென்பதை நாம் பார்க்கலாம்.

சமாதானத்திற்காகப் பாடுபடுவதே இன்று முக்கிய வேலையாக இருக்கிறது. நாம் சமாதானத்திற்காகக் கருமமே கண்ணாகப்பாடுபடவேண்டும் கடந்த மாதம் நான் ஜனதிபதி ஐஸன்ஹோவருடன் மனம்விட்டுப் பேசினேன் சமாதானத்தை நிலைநாட்டவேண்டுமென்பது குறித்து இருவரும் விவாதித்தோம் ஐஸன்ஹோவர் ஒரு விவேகி. அவர் சர்வதேச நெருக்கடியை உணர்ந்தே இருக்கிருர் போர் மூண்டால் சர்வநாசமே ஆகவே யாரும் போருக்கு அஞ்சாமலிருக்கமுடியாது

#### கூட்டு நடவடிக்கை

சமாதான நலனுக்காக கூட்டு நடவடிக்கை எடுக்கவேண்டும் அது குறித்து உடன்பாடு காண வேண்டுமென்று ஐஸன்ஹோவரிடம் நான் கூறினேன் எனது கருத்தை ஐக் ஏற்றுக்கொண்டார். ஆனல் உடன்பாடு காண்பது சுலபமல்ல

இதர நாடுகளின் மிரட்டலுக்குச் சோவியத் யூனியன் அஞ்சாது

என்னை அமெரிக்காவுக்கு ஐஸன்ஹோவர் அழைத்ததும் சோவியத் யூனியனுக்கு வர அவர் விருப்பம் தெரிவித்ததும் தீர்க்கதரிசனம் வாய்ந்தது அமெரிக்க மக்கள் சமாதானத்தை நாடுவதற்கும் இது ஒரு அறிகுறி

மறிகாலத்திற்குள் உச்சகட்ட மகாநாடு கூட்டப்படலாம். அம்மகாநாட்டில் மக்களுக்கு கவலை உண்டுபண்ணிக்கொண்டிருக்கும் பிரச்னைகளைப் பற்றி அபிப்பிராயங்கள் பரிமாறிக் கொள்ளப்படும் நிரந்தர சமாதானத்தை நிலைநாட்ட ஆவனயெல்லாம் செய்யப்பட வேண்டும்

#### சீன-ரஷ்ய ஐக்கியம்

சீன-சோவியத் நட்பும் நல்லுறவும் ஐக்கியமும் வளர்ந்து கொண்டே போகின்றன. பீகிங்கிற்கு எனது விஜயத்தால் இது தெளிவாயிற்று

லட்சோப லட்சம் தொழிலாளர் சுரண்டப்படுவதால்தான் முதலாளித்துவம் நிலைக்கிறது சமுதாய வளர்ச்சி மார்க்ஸின் விமர்சன விஞ்ஞானரீதியானது வாழ்க்கை அவரது சித்தாந்தத்தை நிலைநாட்டிவிட்டது

## பிரிட்டிஷ் தேர்தல் முடிவுகள்

### கன்சர்வேடிவ் கட்சி வெற்றி முகம்

லண்டன், அக் 9—

பிரிட்டனில் நடைபெற்ற பொதுத் தேர்தலின் இதுவரை வெளியான முடிவுகளில கன்சர்வேடிவ் கட்சிக்கு அதிகஸ்தானங்கள் கிடைத்துள்ளன தொழிற் கட்சித் தலைவர் கெயிஸ்ட்கெல பேசும்போது, தேர்தல் முடிவுகள் வெளியிடப்பட்டிருப்பதன் அடிப்படையில் பார்த்தால், கன்சர்வேடிவ் அரசாங்கம்தான் அமையும் போலிருக்கிறது. என்ருர்.

'நாம் போர்து ஏமாற்றமடைந்தோம்; வெற்றி பெறுவோமென்று எதிர்பார்த்தோம் ஆனல் வெற்றிபெறவில்லை என்றும் கெயிஸ்ட்கெல் தனது தொகுதியில் பேசும்போது கூறியிருக்கிருர்.

கன்சர்வேடிவ் கட்சியினர் வெற்றியில் பெரும் மகிழ்ச்சி எய்துகின்றனர் 1955ம் வருடத் தேர்தலில் கிடைத்த வாக்குகளை

4-ம் பக்கம் பார்க்க

அறிவிப்பு

10-9-59ம் தேதி சனிக்கிழமை நமது அச்சகத்திற்கு விடுமுறை யாதலால் 11-9-59 தேதியிட்ட "ஜனசக்தி" வெளிவராது.

—நிர்வாகி.

ஜனசக்தி

சென்னை 10-10-1959

# மொரார்ஜியின் துரோகம்

"இந்தியாவில் முதலீடு செய்யும் அன்னியரின் தனியார் மூலதனத்தை தேசீயமயமாக்க மாட்டோம். இந்தியாவின் இறுதி லட்சியம் சோஷலிசமல்ல."

இங்ஙனம் கூறியவர் டாடாவோ பிர்லாவோ அல்ல! அல்லது சுதந்திராக் கட்சித் தலைவர்கள் ராஜாஜியோ, ரங்காவோ அல்ல! ஆவடியிலிருந்து நாகபுரிவரை 'சோஷலிசமே எங்கள் இலட்சியம்' என தீர்மானத்திற்கு மேல் தீர்மானம் நிறைவேற்றியுள்ள ஆளும் கட்சியின் மத்திய ஆட்சியின் நிதி அமைச்சர் மொரார்ஜி தேசாய்தான் இவ்வாறு கூறியிருக்கிறார்! நியூயார்க்கில் அமெரிக்கப் பத்திரிகையாளர்கள் மத்தியில் பேசிய மொரார்ஜி இந்தியாவின் இறுதி லட்சியம் சோஷலிசமே அல்ல என்று தெள்ளத் தெளிவாக, திட்டவட்டமாக மறுத்திருக்கிறார்.

தங்கு தடையின்றி பிற நாடுகளில் கொள்ளையடிக்கக் காத்து நிற்கும் அமெரிக்க முதலாளிகளுக்கு மொரார்ஜியின் கூற்று மகிழ்ச்சியளித்திருக்கும். அன்னிய முதலாளிகளுடன் சேர்ந்துகொண்டு இந்தியாவில் கூட்டாக கொள்ளை லாபமடித்து வரும் இந்திய முதலாளிகளுக்கு ஆனந்தத்தை அளித்திருக்கும். ஆனால் இந்திய மண்ணில் பிறந்த ஒவ்வொருவருக்கும், ஏன் காங்கிரஸ்காரர்களுக்குக்கூட அதிர்ச்சியையும், ஆச்சரியத்தையும் அளித்திருக்கும்.

மொரார்ஜியைப் போன்று இதற்கு முன்னால் இருந்த டி. டி. கிருஷ்ணமாச்சாரியரும் இதே போன்றுதான் பேசினார். அன்று பேசிய அமைச்சரை இன்று அமைச்சரின் பீடத்திலிருந்து காணோம். இருந்தும் மொரார்ஜி தேசாய் இந்திய அரசாங்கத்தின் கொள்கைக்கே முரணான முறையில் "சோஷலிசம் எங்கள் இறுதி இலட்சியம் அல்ல" என்று கூறுகிறார்! அமெரிக்க முதலாளிகளுக்குப் பாதை திறந்து விடுகிறார். இதுதான் இந்திய அரசாங்கத்தின் கொள்கையா? இதுதான் ஆவடி சோஷலிசமா? நாகபுரித் தீர்மானமா?

நமது தேசத்திற்கும், தன் கட்சிக்கும் துரோகமிழைக்கும் மொரார்ஜி தேசாய் மீது நடவடிக்கை எடுப்பார்களா?

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிடியிலிருந்து விடுதலை பெற்ற இந்தியாவை அமெரிக்க ஏகாதிபத்தியத்தினிடம் அடகு வைக்க விரும்புகிறார்கள் இந்திய முதலாளிகள். அதற்கான பாதையும் ஆண்டுதோறும் விரிவடைந்து கொண்டே வருகிறது. இதன் அறிவிப்புதான் மொரார்ஜியின் பேச்சு.

அமெரிக்க முதலாளிகளின் கடனுக்காக மொரார்ஜி காவடி எடுத்துள்ளாரே, அக்கடனின் தன்மை என்ன? அமெரிக்காவில் ஏற்பட்டுள்ள பொருளாதாரச் சரிவைச் சரிக்கட்டவும், தேங்கிக் கிடக்கும் பொருள்களுக்கு மார்க்கெட் தேடவும், அதிக வட்டிக்கு, பல நிபந்தனைகளோடு கடன் கொடுக்கவுமே முன் வருகிறார்கள். நமது தொழில் வளர்ச்சிக்கு அவசியமான உதவி அல்ல. அபிவிருத்தி உதவி, பாதுகாப்பு உதவி, பரஸ்பர உதவி, தொழில் நுட்ப உதவி என்ற பெயரிலுள்ள எந்த அமெரிக்க உதவியை எடுத்துப் பார்த்தாலும் அவ்வுதவிகளெல்லாம் நிபந்தனைகளுடன் கூடியதாகவும் குறுகிய காலத்தில் கொள்ளை லாபமடிக்கும் உதவியாகவே இருப்பதைப் பார்க்கலாம். அமெரிக்க முதலாளிகள் 1953-55ம் ஆண்டுகளில் இந்திய விருந்து இந்தோனேஷியாவிலும் 6 கோடியே 60 லட்சம் டாலர் மூலதனம் போட்டார்கள். ஆனால் அவர்களுக்குக் கிடைத்த லாபமோ 24 கோடியே 10 லட்சம் டாலராகும்! இதில் 20 கோடியே 30 லட்சம் டாலர் அப்பொழுதே அமெரிக்காவிற்குப் போய் சேர்ந்துவிட்டது. "அமெரிக்க அரசாங்கமும், முதலாளிகளும் வெளி நாடுகளில் போட்ட மூலதனத்திலிருந்து, சமீப வருடங்களில் பெருமளவு தொகை அமெரிக்காவுக்குக் கிடைத்துள்ளது" என்று "உலகப் பொருளாதார பரிசீலனை" எனும் நூல் கூறுவதிலிருந்தே அமெரிக்க உதவியின் லட்சணத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

இந்த அபாயகரமான, சுரண்டல் நோக்கமுள்ள கடனைப் பெறுவதற்காகத்தான் மொரார்ஜி தேசாய் இன்றுவரை கூறிவந்த இந்தியாவில் இன்னும் கூறிவருகின்ற சோஷலிசம் இந்தியாவின் லட்சியம் அல்ல என்று கூறி, அமெரிக்க முதலாளிகளைத் திருப்திப்படுத்தியிருக்கிறார். எந்த நோக்கத்தோடு கூறியிருந்தபோதிலும் மொரார்ஜி இந்திய அரசாங்கத்தின் அகில கட்சியின் கொள்கைக்கும் மாறுபட்ட முறையில் பகிரங்கமாய்ப் பேசியிருக்கிறார். இத்தகைய அமைச்சர்கள் அரசாங்கத்தின் பொறுப்பு வாய்ந்த பதவிகளில் அமர்ந்திருப்பது நாட்டிற்கு மிக அபாயத்தை விளைவிக்கக் கூடியதாகும்.

# இந்திய பாட்டாளி வர்க்கத்தின் ஒப்பற்ற தலைவர் எஸ். ஏ. டாங்கே

## அக்டோபர் 10-ந்தேதி 61 வது பிறந்த நாள்

### அவரது சேவைகள்பற்றி குறிப்பு

"தோழர் எஸ். ஏ. டாங்கே அக்டோபர் 10-ந் தேதி 60 வயது நிரம்பப் பெறுகிறார். அதே நன்னாளில் அவருக்கு மற்றொரு பெருமை ஏற்படுகிறது. பாட்டாளி வர்க்கத்திற்கு 40 ஆண்டுகள் தொடர்ந்து பணியாற்றிய பெருமையே அது. 1918-ம் ஆண்டு முதல் தோழர் டாங்கேயின் வரலாறும் நமது நாட்டு பாட்டாளி வர்க்கத்தின் புரட்சிகரமான வரலாறும் ஒன்றே"



'டிரேட் யூனியன் ரெக்கார்டு' என்ற ஏடு மேலே கண்டவாறு எழுதியது. அந்த ஏடு மேலும் கூறுவதாவது:

1918-ம் ஆண்டில் பம்பாய் நகரில் விஷ ஜுரம் பரவியிருந்தபோது பாட்டாளிகளுடன் முதன் முறையாக நேரடியான தொடர்பு தோழர் டாங்கேயிக்கு ஏற்பட்டது. அவர் பாட்டாளிகளுக்குச் சிருட்சை செய்தபோது பாட்டாளிவர்க்கத்தின் வருங்காலம் பிரகாசமாக இருக்கப் போகிறதென்று அவர்களுக்கு நம்பிக்கை உண்டுபண்ணினார். அதுமுதல் அவர் பாட்டாளி வர்க்கத்திற்கு இணையில்லா நம்பிக்கை ஊட்டி வருகிறார். அவர்களுக்குத் தொண்டு செய்து பணியாற்றியும் வருகிறார். பாட்டாளிகளின் குறைகளைப் போக்கியும் அவர்களது வருங்காலத்திற்காகப் போராடியும் வருகிறார். அன்று முதல் தோழர் டாங்கேயின் வாழ்க்கை வரலாறும் நமது நாட்டுப் பாட்டாளி வர்க்கத்தின் புரட்சிகரமான இயக்கத்தின் வரலாறும் ஒன்றே.

#### திருப்பு முனை

தோழர் டாங்கே வாழ்க்கை வரலாற்றில் ஒரு திருப்பு முனையாக இருந்ததுபோலவே நமது நாட்டுப் பாட்டாளிவர்க்க இயக்கத்தின் வரலாற்றிலும் ஒரு திருப்புமுனை ஏற்பட்டது. தொழிற்சங்க இயக்கம் சோஷலிஸ்ட் லட்சியங்களைக் கடைபிடிக்க ஆரம்பித்து நமது நாட்டின் தேசிய, அரசியல் வாழ்க்கையின் பெரும் விசேஷத்தைப் பெற்றது.

1920ல் அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸின் முதல் மாநாடு நடந்தது. அதில் தோழர் டாங்கே பங்கு எடுத்தார். 1921ல் அவர் காந்தியும் லெனினும் என்ற நூலை வெளியிட்டு, நமது சகாப்தத்தின் இரு பெரும் சிந்தனைச் சிற்பிகளின் உண்மையான வர்க்க மனப்பான்மையை நாட்டு மக்களுக்கு முதன் முறையாக விளக்கினார். 1922-ல் தோழர் டாங்கே 'சோஷலிஸ்ட்' என்ற ஒரு ஆங்கில வார ஏட்டை ஆரம்பித்தார். அது இந்தியாவில் முதன் முதல் தோன்றிய சோஷலிஸ்ட் ஏடு. 'நரகத்தைக் கண்டேன்' என்ற தலைப்புடன் அவர் ஒரு நூலையும் பிரசுரித்து, அந்நூலில் நமது நாட்டுப் பாட்டாளி மக்களின் துயரநிலையை வர்ணித்திருந்தார். அதுமுதல் அவரது தலைமையில் நமது நாட்டின் தொழிற்சங்க இயக்கம் வளர ஆரம்பித்தது.

#### 1924-ம் வருஷ வேலைநிறுத்தம்

1924ல் தோழர் டாங்கே பரிபூரணமாகப் பாட்டாளிவர்க்கத்துடன் ஒன்றுபட்டார். அவ்வாண்டு, சரித்திர விசேஷம் பொருந்திய வேலைநிறுத்தப் போராட்டத்தைப் பம்பாய் பாட்டாளி வர்க்கம் ஆரம்பித்தது. மற்றவருடன் தோழர் டாங்கேயும் கைது செய்யப்பட்டு 'கான்பூர் சதி வழக்'கில் 4 வருஷ தண்டனை அடைந்தார். தோழர் டாங்கே சிறையிலிருந்து விடுதலையான பிறகு 1927ல் அவரது பணிகளை அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரசின் தலைவர்கள் அங்கீகரித்து அவரைத் தொழிற்சங்கக் காங்கிரசின் உதவி காரியதரிசியாக ஒருமனதாகத் தேர்ந்தெடுத்தனர்.

இந்திய பாட்டாளி வர்க்க இயக்கத்தின் பிறப்பிடமான பம்பாயிலேயே டாங்கே ஆரம்பத்தில் முக்கியமாகப் பணியாற்றி வந்தபோதிலும் அங்கரோடு நின்றுவிடவில்லை. இதர தொழில் ஸ்தாபனங்களின் பாட்டாளி வர்க்கப் போராட்டங்களில் அவர் தீவிரமாக ஈடுபட்டார். தோழர் டாங்கே பிறகு தொழிற்சங்கங்களின் உலக சம்மேளனத்தின் ஸ்தாபகர்களில் ஒருவரானார்.

யந்திர சாதனங்களை ஏற்படுத்தி ஆட்குறைப்பு செய்ததை ஆட்சேபித்து 1928ல் நடந்த வேலைநிறுத்தம் நீண்டகாலம் நடந்தது. அந்த வேலை நிறுத்தத்தால் டாங்கேயின் 'வளர்ப்பு குழந்தை'யான கிர்ணி காம்கார் யூனியன் தோன்றியது.

#### மீரத் சதிவழக்கு

1929ல் தோழர் டாங்கே மீரத் சதி வழக்கில் சிக்கினார். அவ்வழக்கில் அவருக்கு 12 வருஷ தண்டனை விதிக்கப்பட்டது. அப்பீலில் அத்தண்டனை 3 வருஷமாகக் குறைக்கப்பட்டது.

#### அ. இ. கா. க.விலிருந்து ராஜிநாமா

1930ல் அவர் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சட்டசபை தேர்தல்களுக்கு தொழிலாளரின் பிரதிநிதிகளை நியமிக்கும் உரிமை அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரஸிற்கே இருக்கவேண்டுமென்று டாங்கே வற்புறுத்திய கோரிக்கையை அ. இ. கா. கமிட்டி நிராகரித்தது. அதன் பேரில் அக்கமிட்டியிலிருந்து தோழர் டாங்கே ராஜிநாமா செய்தார்.

அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரசின் 16 வது மாநாடு அவரை உதவி தலைவர்களில் ஒருவராகத் தேர்ந்தெடுத்தது. உதவி தலைவராக இருந்து டாங்கே பெரும் வேலைநிறுத்தப் போராட்டம் நடத்தினார். தொழிற்சங்க உரிமைகளைத் தடை செய்யும் மசோதாவை எதிர்த்து பம்பாய் பாட்டாளி வர்க்கம் நடத்திய மிகப் பெரிய வேலை நிறுத்தம் அதுவே.

#### உலக சம்மேளனத்திலும் பதவி

1943ல் அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரசின் 20-வது மகாநாடு நடந்தது. அம்மாநாடு அவரை தொழிற்சங்கக் காங்கிரசின் தலைவராகத் தேர்ந்தெடுத்தது. 1945ல் அவர் உலக தொழிற்சங்க சம்மேளனத்தின் உபதலைவரானார். 1947ல் டாங்கே மீண்டும் அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரஸ் தலைவரானார். 1949ல் நடந்த அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரசின் 23வது மாநாடு அவரை அக்காங்கிரசின் பொதுச்செயலாளராகத் தேர்ந்தெடுத்தது. அது முதல் அவர் அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரசின் ஜீவநாடியாக இருந்துவருகிறார்.

#### 61-வது பிறந்த நாள் கொண்டாட்டம்

தோழர் எஸ். ஏ. டாங்கேயின் 61-வது பிறந்த நாள் அக்டோபர் 10ந் தேதி கொண்டாடப்படும். அவர் இந்திய பாட்டாளி வர்க்க புரட்சி உத்வேகத்தின் விளைவு ஆவார். இந்திய பாட்டாளி வர்க்கத்தின் புரட்சி உணர்வின் வளர்ச்சியுடன் அவரும் வளர்ந்தார். பாட்டாளி வர்க்க இயக்கமும் அவருடன் வளர்ந்தது.

அக்டோபர் 10ந் தேதி நமது பாட்டாளி வர்க்கம் அவருக்கு அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரஸ் கட்டிட நிதிக்காக ஒரு பணமுடிப்பை வழங்கும்.

அக்டோபர் 10ந் தேதி பம்பாயில் தோழர் டாங்கேயின் 61வது பிறந்தநாள் கோலாகலத்துடன் கொண்டாடப்படும். நகர வசிகளின் கமிட்டி அவருக்கு ஒரு பணமுடிப்பை வழங்கும். அப்பணமுடிப்பு, பம்பாய் நகரில் அரசியல் நூல்கள் கொண்ட ஒரு நூல் நிலையம் நிறுவ பயன்படுத்தப்படும். டாங்கேயிக்கு வயது அறுபது என்ற தலைப்புடன் ஒரு நினைவு மலர் ஒன்று பிரசுரிக்கப்படும். தோழர் ராகுல் சங்கிருத்தியாயன் தலைமையில் அமைக்கப்பட்டுள்ள கமிட்டியே அந்த நினைவு மலரைத் தயாரிக்கும்.

அக்டோபர் 10-ந் தேதி இந்திய பாட்டாளி வர்க்கம் தனது சிறப்புவாய்ந்த சென்றகாலத்தை நினைவுகூர்ந்து, வருங்கால போராட்டங்களுக்கு ஆதர்சம் பெறும்.

அக்டோபர் 10-ந் தேதி நமது நாட்டின் பாட்டாளி வர்க்கம் தோழர் டாங்கேக்கு நீண்ட ஆயுளை விழைவார்கள், அவரது ஆயுள் இன்பமும் பணியும் நிறைந்திருக்க வேண்டுமென்றும் விழைவார்கள்.

# மலேயா கம்யூனிஸ்ட் தலைவர் ஆர். பாலன்

## விரைவில் விடுதலையாகி சென்னை வருவார்

சென்னை, அக். 6—

மலேயா கம்யூனிஸ்டு கட்சியின் மத்திய கமிட்டி உபதலைவர் தோழர் ஆர். பாலன் மலேயா இந்தியரின் நல மதிப்பைப் பெற்றவர். தொழிலாளர் வர்க்கத் தலைவர். தோழர் பாலனை 1948ம் வருஷம் கைது செய்து இதுவரையிலும் பாதுகாப்பு கைதியாகவே வைத்துள்ளனர். தொழிலாளர் வர்க்கத்திற்காகப் பாடுபட்டதே அவர் செய்த குற்றம். 11 வருஷம் 4 மாதம் சிறைபட்டிருந்த அவர் நாடு கடத்தப்படும் சட்டத்தின் கீழ் லண்டனுக்குச் சென்று சட்டப்படிப்பு படிக்க மலேயா சர்க்காரை கேட்டுள்ளார். மலேயா சர்க்காரும் அனுமதி கொடுக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

லண்டனுக்குச் செல்லும் வழியில் அவர் சென்னையில் ஒரு மாதம் தங்கிச் செல்ல விருப்புவதாகக் கடிதம் எழுதியுள்ளார்.

# உங்களுக்குத் தெரியுமா?

[கே. முருகேசன்]

### 8 மடங்கு லாபம்

திருவொற்றியூரிலுள்ள என்பீல்டு தொழிற்சாலை முதலாளி மார்ச் 1958 வருடத்தில் ரூ 4,92,000 நிகர லாபம் சம்பாதித்துள்ளார்.

1957 வருட நிகர லாபம் ரூ 55,000.

1958ல் விற்பனை ரூ 68,01,000

1957ல் விற்பனை ரூ 41,26,000

1958ல் தேய்மானத்திற்காக ஒதுக்கி எடுத்துக் கொண்டது ரூ 2,68,000

1957ல் தேய்மானத்திற்காக ஒதுக்கிக்கொண்டது ரூ. 83,496

அபிவிருத்தி ரிபேட்டுக்காக என்று 1958 ல் ரூ 2 லட்சம் முதலாளிகள் ஒதுக்கிக்கொண்டனர். 1957ல் இந்த இனத்தில் எத்தொகையும் ஒதுக்கப்படவில்லை.

என்பீல்டு தொழிலாளர் சிப்பந்திகள் மத்தியில் சதா பிளவுகளை ஏற்படுத்தி மானேஜ்மெண்டு ஏற்படுத்தியிருக்கும், வளர்ச்சி அடைந்து வரும் தொழிலுக்கு பெரும் குந்தகத்தை வருவிக்கும் ... என்று விஷயமறிந்த ஐ. என். டி. யு. சி, தொழிற்சங்கத் தலைவர்கள் எச்சரிக்கின்றனர்.

★

நாகப்பட்டணம் மின்சாரக் கம்பெனிக்கு 1959 மார்ச் 31-ந் தேதி முடியும் 1 வருடத்தில் ரூ. 49,460 லாபம் கிடைத்துள்ளது.

★

49-வது ஆண்டு (தென் இந்திய மோட்டார் சங்கம்) — ழ வல் தலைவர் டி. வி. சீனிவாசம்.

★

17-9-59ந் தேதி பகல் 12-45 மணிக்கு எழும்பூர் ரயில்வே ஸ்டேஷனில் ஒரு கடிகாரம் 12-15 மணியையும் மற்றொரு கடிகாரம் 1-45 மணியையும் காட்டின.

1959 ஆண்டு மே மாதத்தில் இந்தியாவில் 131 வேலைநிறுத்தங்கள் நடைபெற்றன. 127 வேலை நிறுத்தங்களில் 83,755 தொழிலாளர்கள் பங்கு எடுத்துக் கொண்டனர், 8,54,517 மனித நாட்கள் நஷ்டமாயின.

32 வேலைநிறுத்தங்கள் பூரணமாகவும், தகுதியாகவும் வெற்றி பெற்றுள்ளன.

வேலைநிறுத்தங்கள் ஏற்பட்டதற்கு காரணம் கூலி, அலவன்ஸ் தகராறுகளே.

★

1959 ஏப்ரலில் சென்னை ராஜ்ய பஞ்சாலைகளில் 1,70,464 பெயர்கள் பதிவாயிருந்தன. ஆனால் முதல் ஷிப்டில் 60,008 தொழிலாளிகளும், இரண்டாவது ஷிப்டில் 9,625 ஆக 1,08,314) தொழிலாளர்களே வேலை செய்தனர்.

★

பிலாய் உருக்குத் தொழிற்சாலையில் 64,000 தொழிலாளர் சிப்பந்திகள் வேலை செய்கின்றனர்.

★

மேட்டூர் கெமிகல் அண்டு இண்டஸ்ட்ரியல் கார்ப்பரேஷன் (மானேஜிங் ஏஜண்டுகள். சேஷாயி சகோதரர்கள் தனியார் துறை)

1959 மார்ச் முடிய

| | |
|---|---|
| நிகர லாபம் | 20,99,000 |
| விற்பனை | 1,21,37,000 |
| சம்பளம், கூலி | 12,28,000 |
| மானேஜிங் ஏஜண்டு கமிஷன் | 2,00,000 |

★

தமிழ் நாட்டில் ரிஜிஸ்டராகியிருந்த தொழிற்சங்கங்கள் 962 இவ்வாண்டு ஏப்ரல் மாதத்தில இருந்தன என்று சென்னைராஜ்ய லேபர் டிபார்ட்மெண்ட் அறிவிக்கிறது.

# அமெரிக்க அணுசக்தி கமிஷன் தலைவர் சோவியத் அணுசக்தி நிலையங்களை பார்வையிடுவார்

வாஷிங்டன், அக். 8—

அமெரிக்க அணுசக்தி கமிஷன் தலைவர் ஜான்மெக்கோன் நாளைக்குச் சோவியத் யூனியனுக்குப் புறப்படுகிறார், அங்கே அவர் சோவியத் அணுசக்தி நிலையங்களைப் பார்வையிடுவார்.

பிறகு சோவியத் அணுசக்தி கமிஷன் தலைவர் அமெரிக்காவுக்கு வந்து அமெரிக்க அணுசக்தி ஸ்தாபனங்களை பார்வையிடுவார்.

குருஷ்சேவ் அமெரிக்காவுக்கு விஜயஞ் செய்திருந்தபோது அமெரிக்க கமிஷன் தலைவர் மெக்கோனும், சோவியத் பேராசிரியர் எமிலினுவும் நடத்திய பேச்சின் விளைவாகவே அமெரிக்க அணுசக்தி கமிஷன் தலைவர் சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்கிறார். (ராய்ட்டர்)

# உச்சகட்ட மகாநாடு

## அமெரிக்க வெளிவிவகார காரியதரிசி கருத்து

வாஷிங்டன் அக். 6—

உச்சகட்ட மகாநாடு எங்கு எப்போது என்கிற விஷயம் இதர நாடுகளின் ஆலோசனையின் பேரில் செய்யவேண்டியது என்று அமெரிக்க இராஜாங்க காரியதரிசி கிறிஸ்டியன் ஹெர்டர், இன்று பத்திரிகை நிருபர்களிடையே கூறினார்.

# இந்திய-சீனத் தலைவர்கள் சந்தித்துப் பேசவேண்டும்

## ஆசிய ஒற்றுமையை கட்டி காக்கவேண்டும்

### இந்திய தேசிய மாதர் சம்மேளன மகாநாட்டில் தீர்மானம்

வாரணசி, அக். 7—

இந்திய-சீன எல்லைத் தகராறை சமாதான வழிகளில் இரு நாட்டுத் தலைவர்களும் பரஸ்பரம் நல்லெண்ணம் மதிப்பு என்ற அடிப்படையில் பேசித் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்று, இந்திய தேசிய மாதர் சம்மேளனத்தின் மகாநாட்டில் கோரப்பட்டது. மூன்று நாட்கள் நடைபெற்ற மகாநாடு இன்று முடிவடைந்தது.

சமாதானம், ஆசிய ஒற்றுமை என்பது பற்றி சம்மேளனம் நிறைவேற்றிய தீர்மானம் குறிப்பிடுவதாவது,

ஆசிய நாடுகளிடையே நிலவும் நட்புறவில், தற்காலமாக வேண்டாத பகைமை உணர்ச்சி ஏற்பட்டு, நிலைமை சீர்கேடு அடைந்து வருவது ஆழ்ந்து கவனிக்கத் தக்கது. அதுவும் எல்லை விஷயமாக இந்திய-சீன உறவுக்குள்ளே கடுமையான வார்த்தை பிரயோகங்கள் அண்மையில் வெளியிடப்பட்டிருப்பது பற்றி கவனத்தில் கொள்ள வேண்டும். சமாதானத்திற்காகவும், பஞ்சசீல கோட்பாடுகளின் வெற்றிக்காகவும், தகராறுகளை பரஸ்பரம் சந்தித்துப் பேசுவதின் மூலமும் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்று பல காலம் போராடி வந்த சம்மேளனம், இப்போதும் எல்லை விஷயத்திற்கு திறந்த மனதோடு, பரஸ்பரம் மதிப்பு கொடுத்து சமாதானபூர்வமான பேச்சுவார்த்தைகள் மூலம் தீர்வு காண செயலில் இறங்கவேண்டுமென்றும் இந்திய சீனத் தலைவர்களை கேட்டுக் கொள்ளுகிறது என்று தீர்மானம் குறிப்பிடுகிறது. (பி. டி. ஐ)

# இலங்கையில் செய்தி தணிக்கை

## பத்திரிகைகளின் எதிர்ப்பு

கொழும்பு, அக். 7—

இன்று முதல் செய்தி தணிக்கையை இலங்கை சர்க்கார் அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறது.

இத் தணிக்கை உத்தரவைத் 'தினமின', 'லங்கா தீப', 'டைம்ஸ் ஆப் சிலோன்' முதலிய பத்திரிகைகள் கண்டித்து எழுதியிருக்கின்றன.

"பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டு பிரதமர் கொலை பற்றியதையும் பத்திரிகைகள் வெளியிட முடியாது" என்று லங்கா தீப எழுதியிருக்கிறது.

# பம்பாய் ராஜ்ய பிரிவினை

## சம்யுக்த மகாராஷ்டிர சமிதி வாக்குறுதி

பம்பாய், அக் 6—

பம்பாய் ராஜ்யம் மகாராஷ்டிரா, குஜராத் என்று இரு ராஜ்யங்களாகப் பிரிக்கப்படும்பொழுது, இந்திய அரசியல் சட்டத்தில் மொழிவழி மத சிறுபான்மையினருக்கு உத்திரவாதம் செய்யப்பட்டுள்ள எல்லா உரிமைகளையும் சமூராக சமிதி வழங்கும். என்று சம்யுக்த மகாராஷ்டிர சமிதியின் பார்லிமெண்டரி போர்டு ஒரு தீர்மானத்தில் காங்கிரஸ் மேலிடத்திற்கு வாக்குறுதியளித்துள்ளது.

### சிறுபான்மையோருக்கு பாதுகாப்பு

"பம்பாய் நகரத்திலும், இதர இடங்களிலும் உள்ள சிறுபான்மையினருக்கு அவர்களின் வர்த்தகம், வேலை உரிமை, மத உரிமைகள், சம்பந்தப்பட்ட சகல நியாயமான உரிமைகளுக்கும் நாங்கள் உத்திரவாதம் தருகிறோம். புதிய மகாராஷ்ட்ர சர்க்கார் அந்த நலவுரிமைகளுக்கு மேலும் ஆக்கந்தேடும்", என்று அத்தீர்மானம் குறிப்பிடுகிறது.

இருமொழி பம்பாய் அமைப்புப் பிரச்சினையைப் பற்றி மீண்டும் புனராலோசனை செய்வதென்று காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானித்த பிறகு, மகாராஷ்டர சமிதியின் பார்லிமெண்டரி போர்டு இப்பொழுதுதான் முதல் தடவையாகக் கூடி இத்தீர்மானத்தை நிறைவேற்றியது.

சமிதியின் பொதுக் காரியதரிசி திரு எஸ். எம். ஜோஷி கடந்த ஞாயிறன்று பிரதமர் நேருவை இங்கு சந்தித்து பம்பாய் ராஜ்யப் பிரிவினை பற்றி சம்பாஷித்தது தெரிந்ததே.

# நாடும் நடப்பும்

## கையில்லாதவன் சித்திரமும் காங். நிலச் சட்டமும்

தெருவில் வேடிக்கைக் காட்டும் வித்தைக்காரர்களைப் பார்த்திருப்பீர்கள் ஒரு கூடை கைக்கவிழ்த்திருப்பான் "கூடைக்குள்ளேயிருக்கும் மனிதன் யார் தெரியுமா"வென்று அரை மணி நேரம் பிரசங்கம் செய்வான். சிறிய கூடைக்குள்ளிருந்து ஒரு பெரிய மனிதன் வருவானென்று பையன்கள் எதிர்பார்ப்பார்கள். "ஒரு முறை ஜோராகக் கை தட்டுங்கள்" என்பான். "எல்லோரும் கூடையைப் பாருங்கள்; கோவில்பட்டி மைனர் வரப்போகிறார்" என்பான். கடைசியில் துணிப்பொம்மையைத் தூக்கிக் காண்பிப்பான்.

நிலச்சீர்திருத்தச் சட்டம் வரப்போகிறது, வரப்போகிறது என்று மந்திரிமார்கள் பத்து வருடமாக பிரசங்கம் செய்தார்கள். ஒருமுறை ஜோராகக் காங்கிரசுக்கு ஓட்டுப் போடச் சொன்னார்கள். கடைசியில் வித்தைக்காரன் கோவில்பட்டி மைனரைக் காட்டியதுபோல, நேற்று திருவாளர் நிதி அமைச்சர் நிலச்சட்டம் எப்படி இருக்கும் என்று காட்டிவிட்டார். நிலச்சீர்திருத்தச் சட்டம் என்னவோ வருமாம். ஆனால் புரட்சிகரமாகவோ, தீவிரமாகவோ இருக்காதாம்!

நிலச்சட்டம் வரப்போகிறது என்று தெரிந்து நிலச்சுவான்தார்கள் நிலங்களைப் பகிர்ந்து எழுதி வைத்துவிட்டார்களாம். ஆதலால் விநியோகத்திற்குக் கிடைக்கிற நிலம் குறைவாகத்தான் இருக்குமாம். எனவே விநியோகிப்பதில் பிரச்சினை இருக்காதாம்!

தவக்க விழாவெடுத்துப்போதே "எதிர்பாருங்கள்" என்று விளம்பரம் செய்வதுபோல நிலச்சட்டம் வருகிறது, வருகிறதென்று டமாரம் அடித்தாய்விட்டது அதனால் நிலத்தையெல்லாம் பகிர்ந்து, வயிற்றிலிருக்கின்ற பிள்ளையின் பெயருக்குக் கூட எழுதிவைத்து விட்டார்கள்!

நேற்று விடுதலை பெற்ற கியூபாவைப் பாருங்கள்; ஈராக்கைப் பாருங்கள். அங்கும்தான் நிலச்சட்டம் கொண்டுவந்திருக்கிறார்கள். இங்குதான் கொண்டு வருகிறார்கள்.

வேண்டுமானால் 1947-ம் ஆண்டிற்குப் பின்னால் பகிர்ந்து எழுதி வைக்கப்பட்ட நிலமெல்லாம் செல்லாது என்று சட்டத்தில் ஒரு ஷரத்தைச் சேர்த்துப் பார்க்கட்டும். விநியோகத்திற்கு நிலம் கிடைக்கிறதா இல்லையாவென்று பார்ப்போம். அப்படி ஒரு ஷரத்து சேர்க்கப்பட்டால் சட்டசபையிலிருக்கின்ற பாதிக்கு மேற்பட்ட காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் சுதந்திராக் கட்சிக்குப் போய் விடுவார்கள்! அல்லது ஒரு தனிக்கட்சி ஆரம்பித்து விடுவார்கள்! ஏனெனில் இன்று சென்னை ராஜ்யத்தில் நிலப்பிரபுக்கள் இல்லாமல் காங்கிரஸ் என்பது இல்லை. சென்னைப் பாலும் தண்ணீரும்போல இரண்டறக் கலந்திருக்கிறார்கள்! கையில்லாதவன் சித்திரம் வரையவும் முடியாது; காங்கிரஸ் மந்திரிகளால் நிலம் கொடுக்கும் சட்டமும் கொண்டுவரமுடியாது. உச்சிவெயிலில் பனமழையை நம்பி உழவும் கூடாது! காங்கிரஸ் மந்திரிகளை நம்பி (நிலம் கிடைக்கும் என்று) காத்திருக்கவும் கூடாது!

★

### குருவுக்கு படியாத சீடர்கள்!

கல்கத்தாவிற்கு அருகில் பாண்டுகிராம் கிராம ஆதாரப் பள்ளி தலைமையாசிரியருக்கு ஒரு கடிதம் வந்தது. கடிதமா? உத்தரவு! "செப்டம்பர் 6-ம் தேதி உம்முடைய பையன்களுடன் தயாராக இரும்! நேரு அறைகூவல் விடுத்திருக்கிறார்! சீன ஆக்ரமிப்பிற்கு எதிராக இந்திய ஒற்றுமைத் தினமும், இந்திய கம்யூனிஸ்ட் நடவடிக்கைகளுக்கு எதிர்ப்பு தினமும் கொண்டாடவேண்டும்! இதோ! இதோ கொடுத்திருக்கின்ற சீன விரோத, கம்யூனிஸ எதிர்ப்புக் கோஷங்களை பையன்களை கெட்டுருப் போடச் சொல்லும்" என்பதுதான் உத்தரவு!

நேருஜி இப்படி ஒரு அறைகூவல் விடுத்தாரா என்பதை அவரையே கேட்டுத்தான் தெரிந்துகொள்ள வேண்டும். இந்த உத்தரவைப் பிறப்பித்தவர் யார் தெரியுமா? கோபால் பிகாரிடட் என்ற மண்டல காங்கிரஸ் தலைவர்' அரசாங்கத் ஆதாரப் பள்ளி ஆசிரியருக்கு இந்தியப் பிரதமரின் பெயருக்கு இழுக்குத் தேடுகிற முறையில் உத்தரவிட்டுள்ளார். அரசாங்க இயந்திரத்தை கட்சிக்காக பயன்படுத்துகிறவர்கள் யார் என்பது இப்பொழுது தெரிகிறதா?

நேருவோ இந்தியசீன எல்லை விஷயம் நேசபூர்வமாக பேசித் தீர்க்கவேண்டுமென்று கூறுகிறார். அவரது குட்டித் தம்பிரான்களோ இந்திய சீன நட்புறவைக் குலைக்க அரசாங்கப் பள்ளியையும் பாலர்களையும் பயன்படுத்துகிறார்கள். குருவுக்குப் படியாத சீடர்கள்! கொள்கை தெரியாத வீரர்கள்! இவர்களின் தொகைதான் இன்று காங்கிரஸில் அதிகம் என்று நாம் சொல்லவில்லை. அந்த 'செயல் வீரர்கள்' செயலில் காட்டுகிறார்கள்!

o o o

சர்க்கரைப் பஞ்சம் சுபீட்சத்தின் அறிகுறியென்கிறார் நேரு. இனி உணவுப் பஞ்சம் மக்கள் அதிகம் என்பதன் அறிகுறி என்று சொன்னாலும் சொல்லலாம். எதிர்பாருங்கள்!

—துருவன்

# 14 மாடி உயரமுள்ள இயந்திரம்

## ஒரு மணியில் 3000 கன மீட்டர் மண்ணை வெட்டும் அதிசயம்

மாஸ்கோ, அக். 5—

ரஷ்யாவின் உக்ரேனில் கிராமடோர்ஸ்க் என்ற நகரில் குழி தோண்டும் பிரம்மாண்டமான இயந்திரங்கள் தயாரிக்கும் வேலை ஆரம்பமாகியுள்ளது. இந்த இயந்திரமானது ஒரு மணிநேரத்தில் 3000 கன மீட்டர் மண்ணை வெட்டி எடுத்து, வெகு தூரத்துக்கப்பால் வீசுகிறது.

### செலவு மிச்சமாகும்

12 பர்லாங்கு நீளமுள்ள தரையின் மேல் பரப்பில் உள்ள, நிலக்கரிச் சுரங்கங்களுக்கு இந்த இயந்திரம் உபயோகிக்கப்படும், ஓடும் தட்டுகள் பொருத்தப்பட்டுள்ள ரோட்டார் குழிதோண்டும் இயந்திரத்தை உபயோகிப்பதால், வெட்டியெடுக்கப்பட்ட மண்ணை, ரயில் மூலம் அப்புறப்படுத்த வேண்டிய அவசியமில்லாமற் போய்விடும், ஒரேயொரு தோண்டும் கருவியுடன் கூடிய குழிதோண்டும் எக்ஸ்கவேட்டர் இயந்திரங்களுக்குப் பதிலாக இடம் பெறப்போகும் இப்புதிய இயந்திரத்தால், ஆண்டு ஒன்றுக்கு 3 முதல் 3½ கோடி ரூபிள் மிச்சப்படும்.

### 14 மாடி உயரம்

இந்த இயந்திர அமைப்பில் மூன்று வகையான தோண்டும் சாதனங்களும், மண்ணைத் தூக்கிச் செல்லும் சாதனங்களும் அடங்கியுள்ளன 14 மாடிக் கட்டிடம் ஒன்றின் உயரத்துக்குச் சமமான உயரமுடைய இதன் ரோட்டர் எக்ஸ்கவேட்டர் ஏனது பல பக்கெட்டுகள் (வாளிகள்) விசையமைப்பு மூலம் 40 மீட்டர் கனமுடைய பெரும் சுமையைக்கூட, உடைத்துப் பிரித்து விடுகிறது. குழிதோண்டும் எக்ஸ்கவேட்டர் இயந்திரத்திலிருந்து, மொத்தம் 2½ மைல் நீளமுள்ள ஒரு பல தட்டுப்பாதை அமைப்பு மூலம், வெட்டியெடுக்கப்பட்ட மண்ணானது தொடர்ச்சியாக அகற்றப்படுகிறது.

அடுத்த வருடம் இந்த இயந்திரங்கள் வேலையில் இறங்கிவிடும் என்று டாஸ் செய்தி கூறுகிறது.

# சோவியத் வான மண்டல நிலையம்

## சந்திரனைச் சுற்றிச் செல்கிறது

மாஸ்கோ, அக். 7—

சந்திரனைச் சுற்றிவரும் சோவியத் வானமண்டல நிலையம், சோவியத் விஞ்ஞானிகளால் கணிக்கப்பட்ட சுழல் வட்டத்திலேயே (Orbit) சரியாகத் தொடர்ந்து நகர்ந்து வருகிறது. இந்திய நேரப்படி இன்று இரவு 10-30 மணிக்கு அது சந்திரனிலிருந்து 78,750 மைல் தூரத்தில் பூமிக்கு அப்பால் சென்றுகொண்டிருந்தது என்று சோவியத் செய்தி ஸ்தாபனம் டாஸ் அறிவித்தது.

பூமியிலிருந்து அது 2,59,040 மைல் தூரத்தில் இருந்தது. அதிகபட்சமாக, வானமண்டல நிலையம் அக் 10ல் பூமியிலிருந்து 2,91,964 மைல் தூரம்வரையில் செல்லும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

பின்னர் அக்டோபர் 18ல் அது மீண்டும் பூமியை நோக்கி வந்து பூமியை வடக்கு தெற்கு திசையில் கடந்து செல்லும், என்றும் சோவியத் செய்தி ஸ்தாபனம் அறிவித்தது. பூமிக்கு 24,848 மைல் தூரம்வரையில் அது வரும்.

# கோவை நகரசபையில் தி.மு.க.வின் விபரீதப் போக்கு!

## விஷமத்தனமான குற்றச்சாட்டிற்கு தலைவரின் ஆணித்தரமான பதில்

கோவை, அக். 7—

நகர மன்றக் கூட்டம் சேர்மன் பூபதி தலைமையில் 6-10-59 மாலை 5-30 மணியளவில் நடைபெற்றது.

கூட்டத்தில் ஜி. நாராயணசாமி நாயுடு அவர்கள் கொண்டுவந்த இலங்கைப் பிரதமர் பண்டாரநாயகா அவர்களின் மறைவுக்கான அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

திரு வை. எஸ். பாபா, திரு வி. சி. சுப்பையா கவுண்டர் ஆகியோரின் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்க கொண்டுவந்த தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

போக்குவரத்து, செய்தி இலாகா அமைச்சர் டாக்டர் பி. சுப்பராயன் அவர்களுக்கு நகர மன்ற வரவேற்பு தரலாமென கோரும் ஜி. வி. ராஜம்மாள் அவர்களின் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

கவுன்சிலின் துவக்கத்தில் மீண்டும் தண்ணீர் பிரச்னை விவாதத்திற்கு வந்தது. அதே அங்கத்தினர்கள் தங்கள் வார்டுகளின் பிரச்சினையைக் கிளப்பினர்.

### தி. மு. க. உறுப்பினர் பயமுறுத்தல்

தி. மு. க. உறுப்பினர் சக்கர் பேசுகையில், தண்ணீர் குடங்களை கொண்டுவரச் செய்து, நகர மன்றத் தலைவர் அறைக்கு முன்னும், கமிஷனர், இஞ்ஜினியர் அறைகளுக்கு முன்னும் உடைக்கப் போவதாகவும், அதற்குத்தான் பொறுப்பாளியாக இருக்கமுடியாது என்றும் கூறினர்.

திரு ராஜமாணிக்கம் தி.மு.க. பேசுகையில், தண்ணீர் பிரச்சினையில் அரசியல் காட்டப்படுவதாகக் கூறினர்.

### சலசலப்பு வேண்டாம்

தோழர் கோவிந்தசாமி கம்யூ. பேசுகையில், குடம் உடைப்பது போன்ற சலசலப்புக்களைக் காட்டவேண்டிய அவசியமில்லை; அநேக மக்களின் இயக்கங்களை நடத்தியவர்கள் நாங்கள், என்றார்.

### காங்கிரசே பொறுப்பு

தோழர் ஆர். ரங்கசாமி கம்யூ. பேசுகையில், தண்ணீர் பிரச்சினையில் அரசியல் பாரபட்சம் காட்டப்படவில்லை என்றும், அது உண்மைக்கு மாறானது என்றும், கம்யூனிஸ்ட் உறுப்பினர்களின் வார்டுகளிலும் தண்ணீர் குறைவாகவே வருவதாகக் கூறினர். தொடர்ந்து அவர் பேசுகையில், "பொதுமக்களிடத்தில் தவறான கருத்துத்தோன்றுமளவு பேசப்பட்டதைக் கண்டித்தார். தண்ணீர் நெருக்கடி 1944 லிருந்தே இருந்து வருவதாகவும் மூன்று அதே அளவு தண்ணீர் நெருக்கடி வளர்ந்திருப்பதற்குக் காரணம், 10 ஆண்டு கால மத்திய மாகாண, நகர காங்கிரஸ் ஆட்சிதான் என்றும் குற்றம் சாட்டினர். சிறுவாணி அணைக் கட்ட 1 கோடியே 44 லட்சம் ரூபாயை நிதியமைச்சர் தேஷ்முக் இடத்தில் கேட்டபோது, 2-வது 5-ஆண்டு திட்டத்தில உதவி தருவதாகக் கூறினார். பிறகு, அதை மாற்றி கடனாகத் தருவதாகக் கூறினர். முடிவில மாகாண சர்க்காராச்சு! நீங்களாச்சு! என்று கையை விரித்துவிட்டார். கனம் காமராஜரிடம் சொன்னபோது, சிறு சேமிப்புக்காக 1 கோடி ரூபாயை சேமித்துத் தந்தால் தருவதாகக் கூறினர். அதன்படியே, 1 கோடி ரூபாயை சேமித்துத் தந்தும், 2-வது 5 ஆண்டு திட்டத்தில பல முக்கிய திட்டங்கள் இருக்கின்றன; எனவே, இதற்கு பணம் ஒதுக்கமுடியாது எனக் கூறிவிட்டார். எனவே, தண்ணீர் நெருக்கடியின் வளர்ச்சிக்குக் காரணம் 10 ஆண்டு கால காங்கிரஸ் ஆட்சிதான என்பதைப் பார்க்க வேண்டும். இவற்றைக் கணக்கில எடுத்துக்கொண்டு, சர்க்காரிடம் பணத்தைப் பெற இயக்கம் நடத்த சகலரும் ஒத்துழைக்க வேண்டும். தண்ணீர் விநியோகத்திற்கு ஒவ்வொரு உறுப்பினரும் தகுதியான ஆலோசனை கூறவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

திரு கிருஷ்ணமூர்த்தி (காங்) பேசுகையில், ராஜமாணிக்கம் (தி. மு. க.) தண்ணீர் பிரச்சினையில அரசியல் பாரபட்சம் என்றார். திரு ரங்கசாமி (கம்) தண்ணீர் பிரச்சினையில் காங்கிரஸ் ஆட்சியின் பாரபட்சம் என்கிறார். இப்படி முரண்பட்டு பேசுவதால் பிரச்சினை தீராது என்றார். உடனே, தி. மு. க. உறுப்பினர் திரு. ராஜமாணிக்கம் எழுந்து திரு. ரங்கசாமி சொன்னதையே தானும் சொல்வதாகக் கூறினர்.

முடிவில் நகர மன்றத் தலைவர் எம். பூபதி பேசுகையில், "விரைவில் இந்தத் தண்ணீர் பிரச்சினையைத் தீர்க்க இந்த மாதம் 12-ம் தேதியன்று ஓர் அவசரக் கூட்டம் கூட்டி யோசித்து, திட்டமிட்டுத் தீர்க்கலாமென்றார்.

திரு. ராஜமாணிக்கம் (தி. மு. க.) நகரசபைக்குக் கிடைக்கும் நன்கொடைகளும் கிடைக்காமல் செய்யப்படுகின்றன என்றும், 18-வது வார்டில் தாய் சேய் நலவிடுதி போன்றவை கட்ட ஒருவர் 30 000 ரூபாய் தர முன்வந்ததாகவும், நகர மன்றத் தலைவர் தம்முடைய 12-வது வார்டில் அதை பயன்படுத்திக் கொள்ள முயன்றதாகவும், அதனால் நன்கொடை தர முன்வந்தவர் குழப்பமடைந்திருப்பதாகவும் குறை கூறினர்.

### குற்றச்சாட்டுக்கு மறுப்பு

தோழர் ஆர். ரங்கசாமி இதனை ஆதாரங்களோடு மறுத்து, பேசுகையில், 2 ஆண்டுகளுக்கு முன்பு நன்கொடை தர முன்வந்தவர் 30 000 ரூபாயைத் தருவதாக எழுதியிருந்ததாகவும். அவரிடம் பல இடங்களின் எஸ்டிமேட்டுகள் போடப்பட்டு காட்டப்பட்டதாகவும், ஆனால் இதுவரை அவர் தமக்கு இன்ன இடத்தில்தான் கட்ட விருப்பம் என்று கூறவில்லை என்றும் நன்கொடையும் தரவில்லை என்றும், இதற்கு நகரமன்றத் தலைவரோ, நகர மன்றமோ பொறுப்பல்லவென்றும் கூறினர்.

நகரமன்றத் தலைவர் பதிலளிக்கையில், திரு. ராஜமாணிக்கம் குறிப்பிட்டிருப்பது உண்மையல்ல என்றார். நன்கொடை தர முன்வந்தவரிடம் எஸ்டிமேட்டுகள் காட்டப்பட்டன வென்றும், அவர் தர இருந்த 30 000-த்தோடு, நகர மன்றமும் பணம் போட்டு கட்டிடம் கட்டி நன்கொடையாளரின் பெயரையும் அதில் பொறிக்கலாமென தாம் அவரிடம் கூறியதாகவும், ஆனால் அவர் இதுவரை எந்த பதிலும் எழுதவில்லை என்றும், ஆதாரமற்று அங்கத்தினர்கள் பேசுவது தவறு என்றும் கூறினர்.

திரு. கே. கோவிந்தராசுலு தி.மு.க. ஒவ்வொரு ஆண்டும் சிதம்பரம் பூங்காவில் நடக்கும் பொருட்காட்சியை கோவை நகரமன்றமே எடுத்து நடத்தவேண்டுமென்றும், அதிலிருந்து வரும் வருவாயை திருமண மண்டபங்கள் கட்டவும், கல்வித்துறை வளர்ச்சிக்கு பயன்படுத்தவும் கோரிக் கொண்டுவந்த தீர்மானம் அங்கீகரிக்கப்பட்டது.

நகரசபை ஆரம்பப்பள்ளியிலுள்ள ஹரிஜன மாணவர்களுக்கும், ஊமை, செவிடு பள்ளியிலுள்ள மாணவர்களுக்கும் வழங்கப்படும் உணவுகளில் அதிகப்படியான போஷாக்குள்ள உணவுகளைக் கலந்து விநியோகிப்பதற்கான ஆணையாளரின் குறிப்பும் அங்கீகரிக்கப்பட்டது. (...)

# திருச்செங்கோட்டில் நெசவாளர் பரிதவிப்பு

## பஞ்சப் பிரதேசமாகப் பிரகடனம் செய்வது அவசியம்

திருச்செங்கோடு, அக். 5—

திருச்செங்கோடு நகரம், சுற்றுப்புற கிராமங்கள் இவற்றில் வாழும் மக்களில் 80 சதவிகிதம் பேர் கைத்தறி நெசவாளர்கள் என்றும் இவர்களது நிலை நாளுக்கு நாள் மோசமடைந்து வருவதாலும் இதர காரணங்களாலும் மிகப் பரிதாபகரமாகி விட்டதென்றும் ஆகவே அரசாங்கம் திருச்செங்கோடு பிரதேசத்தைப் பஞ்சப் பிரதேசமாகப் பிரகடனம் செய்யவேண்டுமென்றும் கம்யூனிஸ்ட் கட்சியின் திருச்செங்கோடு டவுன் கிளை செயலாளர் எஸ். ஏ. கணேசன் ஓர் அறிக்கையில் வற்புறுத்தியிருக்கிறார்.

அவர் மேலும் தெரிவிப்பதாவது:—கைத்தறி நெசவாளருக்கு ரிபேட் 1½ அணாவிலிருந்து ½ அணாவாகக் குறைக்கப்பட்டுவிட்டது. இதனால் வியாபாரமும் மந்தமாகி விட்டது. கூட்டுறவு சங்கங்களின் லட்சக்கணக்கான மதிப்புள்ள சரக்குகள் தேங்கிக் கிடக்கின்றன. நூல் விலை ஏறிக்கொண்டே போகிறது. வீவர் மாஸ்டர்கள் நூல்கொடுக்க மறுக்கிறார்கள், குறைந்த கூலிக்கு வேலைசெய்யும் நிலைமையாகப்போய்விட்டது. நெசவாளர் அரை வயிறுடன் செத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே அரசாங்கம் பின்வரும் நடவடிக்கைகளை எடுக்கவேண்டும்.

1 திருச்செங்கோடு பிரதேசத்தைப் பஞ்சப் பிரதேசமாக பிரகடனம் செய்யவேண்டும்.

2 நூல் விலையை ஏற்றி கொள்ளைலாபம் அடிக்கும் கள்ள மார்க்கெட்காரர்களைப் பிடித்துத் தண்டிக்க வேண்டும்.

3. நூல் விலையைக் கட்டுப்படுத்த வேண்டும்.

4 குறைக்கப்பட்ட ரிபேட்டைக் கூட்டிக் கொடுக்கவேண்டும்.

5 தேங்கிக் கிடக்கும் ஜவுளிகளை சர்க்காரே கொள்முதல் செய்யவேண்டும்.

6 வார்டுதோறும் நியாயவிலை கடைகள் திறந்து பட்டணம்படி அரிசி 12 அணாவுக்குப் போடவேண்டும்.

மேற்சொன்ன நடவடிக்கைகள் எடுக்காவிடில், கைத்தறி நெசவாளர் மீண்டும் ஊர் ஊராக அலையவேண்டிய அவல நிலை ஏற்படும்.

# சேரனூர் விவசாயிகள் வெற்றி

## சாகுபடி உரிமை அங்கீகரிக்கப்பட்டது

சேரனூர், அக் 5—

புதுக்கோட்டை டிவிஷனைச் சேர்ந்த சேரனூர் கிராம இனாம்தாருக்கும் விவசாயிகளுக்கும் ஏற்பட்டிருந்த தகராறு சமரசமாகத் தீர்ந்தது. இனாம்தார் பணிந்து அனுப்பிய அவரது பிரதிநிதி பிரான்மலை டா. ஆறுமுகம் என்பவரும், மற்றொரு புறம் சேரனூர் விவசாய சங்கத் தலைவர் எம். அருணாசலம், காரியதரிசி சாத்தப்பெருமான், குளத்தூர் தாலுகா விவசாயிகள் சங்கக் காரியதரிசி எம். மாரியப்பன் விவசாயிகள் சங்க ஊழியர்கள் ராம, பிச்சை முத்து, வீ. அழகப்பன் அம்பலம் ஆகியோர் 29 9-59ல் சமரசப் பேச்சு நடத்தி சமரச உடன்பாடு கண்டனர். இனாம்தார் பிரதிநிதி விவசாயிகளுக்கு சாகுபடி முச்சலிக்கை எழுதிக் கொடுத்தார்.

# திண்டுக்கல்லில் புதிய காலனி

## உதவி ஜனாதிபதி அடிக்கல் நாட்டினர்

திண்டுக்கல், அக். 7—

இந்திய உதவி ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் குறைந்தபட்ச வருமானமுள்ளவர்களுக்கான காலனிக்கு இன்று அடிக்கல் நாட்டினர். திண்டுக்கல் நகரசபையால் கட்டத் திட்டமிடப்பட்டுள்ள இக்காலனியில் 54 வீடுகள் இருக்கும் என்று கூறப்படுகிறது. இவ்வைபவத்தில் நகரசபைத் தலைவர் திரு. ஓ சின்னச்சுவாமி பிள்ளை உதவி ஜனாதிபதிக்கு வாழ்த்து இதழ் வாசித்தளித்தார். (பி. டி. ஐ.)

# நீர்ப்பாசன வசதி கோரி மகாநாடு

## நீர்ப்பாசனத் திட்டங்களை பொதுஜன கமிட்டிவசம் ஒப்புவிக்கவேண்டும்

குளித்தலை, அக் 5—

திரு. பி சங்க கவுண்டர் தலைமையில் 28-9-59ல் கண்ணுடையாம்பட்டியில் தியாகி சிவராமன் பந்தலில் நீர்ப்பாசன வசதி கோரும் மகாநாடு நடைபெற்றது. 80க்கு மேற்பட்ட பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். திருச்சி ஜில்லா விவசாய சங்கத் தலைவர் வி. நாகு அரசாங்கத்தின் பிற்போக்கான உணவுக் கொள்கையும், நீர்ப்பாசன திட்டத்திற்காக ஒதுக்கப்பட்ட பணம் ஒழுங்காக உபயோகப்படுத்துவதில்லை, என்றும் விளக்கிக் கூறினர். நீர்ப்பாசன விஷயத்திலும், உணவு விஷயத்திலும் அரசாங்கம் உடனடி தலையிடவேண்டும் இல்லையெனில் மக்கள் போராட்டம் தொடங்குவர் என்றும் கரகோஷத்தினிடையே பேசி முடித்தார். கீழ்காணும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1 கண்ணுத்துக் கணவாய், கடவூர் கணவாய், மருங்காபுரி கணவாய், பாலாறு உரம்பாறு ஆகிய இடங்களில் அணைக்கட்ட வேண்டும்.

2 குளங்களை மராமத்துச் செய்யவேண்டும்.

3 காவேரி யாற்றிலிருந்து இங்கு தண்ணீர் கொண்டுவர அரசாங்கம் முயற்சிக்கவேண்டும்.

4 கிணறுகள் வெட்டவும், பழைய கிணறுகளை தூர்வாங்கவும், கடன் வசதியளிக்க வேண்டும். கிணறுகள் வெட்ட சர்க்காருக்கு பணம் கொடுக்கும் கால அளவை 1959ம் வருட டிசம்பர் 31ம் தேதி வரை நீடிக்க வேண்டும்.

5 குழாய் கிணறுகள் ஏற்படுத்த அரசாங்கம் ஆவனசெய்யவேண்டும்.

6 நீர்ப்பாசன வசதிக்கு மின்சார வசதியை விஸ்தரிக்க வேண்டும்.

7 மேலேகண்ட கோரிக்கைகளை கவனிக்கவும், ஆவன செய்யவும் தாசில்தார் அந்தஸ்தில் அதிகாரிகளை நியமிக்கவேண்டும்.

8 நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்ற காண்டிராக்டுக்கு விடாமல் பொதுஜன கமிட்டியின் மூலம் நிறைவேற்ற அரசாங்கம் ஆவன செய்யவேண்டும்.

9 விலைவாசி உயர்வைக்கட்டுப் படுத்த வேண்டுமென்றும், 500 குடும்பங்களுக்கு ஒரு நியாய விலைக்கடை வீதம் திறக்கவேண்டுமென்றும் வரும் டிசம்பர் 1959-ம் வருடத்திற்குள் கொண்டுவர வேண்டுமென்றும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

மகாநாட்டில் பொது நிகழ்ச்சி 29—9—59ம் தேதி திரு பி சங்க கவுண்டர் தலைமையில் நடைபெற்றது. திரு சி. கந்தசாமி தீர்மானங்களைப் படித்தார். சொற்பொழிவாளர்கள் ஆர். வி. பொன்னுசாமி ரெட்டியார், பி. சி. பெருமாள், பி. கிருஷ்ணசாமி (எம். எல். என். பி.) வி. நாகு, வி. மதனகோபால் ஆகியோரும் பேசினர். இரவில் ஜி. ஜி ராஜன், டி. எம். சிந்தாமணி குழுவினரின் இசை விருந்து நடைபெற்றது.

# அ. இ. எழுத்தாளர் மகாநாடு சென்னையில் கூடுகிறது

## சீன, ரஷ்ய எழுத்தாளர்களும் கலந்துகொள்கிறார்கள்

சென்னை, அக் 7—

அகில இந்திய எழுத்தாளர் மகாநாடு சென்னையில் இவ்வாண்டு டிசம்பர் மாதம் 3-வது வாரத்தில் கூடுகிறது. இந்திய இலக்கிய வரலாற்றிலும் வளர்ச்சியிலும் அம்மகாநாடு மிக முக்கிய கட்டமாகும்.

இந்திய மொழிகளிலும் ஆங்கிலத்திலும் வல்லுநரான பிரபல எழுத்தாளர்கள், வரவேற்புக் கமிட்டியின் அழைப்பை உற்சாகத்துடன் ஏற்றுக்கொண்டிருக்கின்றனர். நான்கு தென்னிந்திய மொழிகளில் வல்ல எழுத்தாளர்கள் அநேகர் இம்மகாநாட்டில் கலந்துகொள்வார்கள்.

### இலக்கிய விவாதம்

'அரசாங்கமும் எழுத்தாளரும்' என்ற அரங்கத்திற்கு பிரபல ஒரிய மொழி எழுத்தாளர் காளிந்தி சரண் பாணிக்கிரகி தலைமை வகிப்பார், விவாதத்தை மராத்தி நவீனங்கள் இயற்றுபவரான பி. ஒய். தேஷ்பாண்டே ஆரம்பிப்பார், பிரபல மலையாள விமர்சகர் திரு எம். கோவிந்தனும் விவாதத்தில் கலந்துகொள்வார்.

'இந்திய இலக்கிய விமர்சனங்கள் பற்றிய பகுதியில் காஷ்மீரைச் சேர்ந்த பேராசிரியர் ஜே. எல். கால் தலைமை வகிப்பார், 'இந்திய இலக்கியங்களின் ஒருமைப்பாடு' என்பது குறித்து திரு. கே. பி கேசவமேனன் விவாதம் துவக்குவார்.

தொழில் நுட்பம், விஞ்ஞானம், தாற்காலிகப் புது கருத்துக்கள் முதலியவற்றுக்கு இந்திய மொழிகளில் சொற்களை ஆக்குவது பற்றி விவாதத்தில் சென்னை பல்கலைக்கழக துணை வேந்தர் டாக்டர் லக்ஷ்மணசாமி முதலியார் தலைமைவகிப்பார்.

திரு. என். ரகுநாத அய்யர் 'இந்திய மரபும் நவீன எழுத்தாளரும்' என்ற விவாதத்தை ஆரம்பிப்பார்.

### வெளிநாட்டு பிரதிநிதிகள்

எகிப்து, ஜப்பான், சீனா, ரஷ்யா, அமெரிக்கா, இலங்கை, வியட்னாம் முதலிய நாடுகளிலிருந்தும் பிரதிநிதிகள் வந்து இம்மகாநாட்டில் கலந்துகொள்வர்.

இம் மகாநாட்டின் நடவடிக்கைகளை அப்படியே பதிவுசெய்ய வரவேற்பு கமிட்டி ஏற்பாடுகள் செய்துகொண்டிருக்கிறது.

# மலாயாவில் பாடசாலை ஆசிரியருக்குத் தடை

## அரசியலில் ஈடுபடக்கூடாதாம்

கோலாலம்பூர், அக் 7—

பாடசாலை ஆசிரியர்களும் மாணவரும் அரசியலில் ஈடுபடக்கூடாதென்று மலாயா சர்க்கார் தடை செய்துள்ளதென்று நேற்று மலாயா கல்வி மந்திரி அறிவித்தார்.

சில ஆசிரியர்கள் துவேஷம் உண்டுபண்ணுகிறார்கள். அவர்கள் முக்கியமாகக் கிராமப் பிரதேசங்களில் ஒற்றுமையைக் குலைத்து சச்சரவு விளைவிக்கக் கூடுமென்றும் கல்வி மந்திரி அறிவித்தார்.

# ஒளிந்து திரியும் பாகிஸ்தான் பிரஜை!

## கேரளத்தில் ஓட்டராக பதிவு செய்துள்ள விந்தை

தலைச்சேரி, அக் 5—

தேர்தல்-வாக்காளர் பட்டியலில் கள்ள வோட்டர்கள் பெயர்களைச் சேர்ப்பதில் காங்கிரசுடன் கூட்டுச் சேர்ந்துள்ள முஸ்லிம் லீக் தீவிரமாக ஈடுபட்டு வருவதாகத் தெரிகிறது.

பாகிஸ்தானுக்கு ஓடிப்போனவர்கள் உட்பட நாட்டில் இல்லாத பலருடைய பெயர்கள் இந்தப் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ளன.

பாகிஸ்தானில் பிரஜையாகிய பிறகு இங்கு திரும்பிவந்து, தங்கும் விஸா முடிந்து போலீசாருக்குத் தலைதப்பி ஒளிந்து திரியும் ஒருவர் பெயரில் வோட்டுரிமைக்காக விண்ணப்பம் செய்யப்பட்டிருக்கும் விந்தையான நிகழ்ச்சி அம்பலமாகியுள்ளது. இந்த ஒளிந்து திரியும் பேர்வழிக்கு ஸ்தல முஸ்லிம் லீக் பிரமுகர்கள் அபயமளித்துள்ளனர் என்பது இதிலிருந்து ஊகிக்க முடிகிறது.

# மூணாறு பகுதியில் காங்கிரஸில் பிளவு தீவிரமாகிறது

மூணாறு, அக். 2—

மூணாறில் காங்கிரஸிலுள்ள பிளவு தீவிரமடைந்துகொண்டே வருகிறது. ஏற்கனவே தேவிகுளம் தாலுகாவிற்கு தலைவர் தேர்ந்தெடுக்கும் கூட்டம் நடைபெற்றதும் அதில் குழப்பம் உண்டாகி கலாட்டா ஏற்பட்டு காங்கிரஸின் கௌரவம் வெளிப்பட்டதும் 'ஜனசக்தி' யிலும் மற்ற பத்திரிகைகளிலும் வெளிவந்துள்ளது. மேலும் பிளவு விரிவடைந்து வருகிறது. இது பற்றி கூறப்படுவதாவது:

### விசித்திரக் கூட்டம்

பழைய தேவிகுளம் மண்டலக் காங்கிரஸ் கமிட்டி வருக்குத் தெரியாமலும் மாஜி காங்கிரஸ் எம். எல். ஏ. கணபதிக்கு அழைப்பு இல்லாமலும் பலத்த போலீஸ் படையினரின் காவலுடன் தலைவர் தேர்தலுக்கான காங்கிரஸ் கட்சி கூட்டம் பிரயாணிகள் விடுதியில் வைத்து நடைபெற்றது. இக்கூட்டத்திற்கு அனுமதிச் சீட்டு வழங்கப்பட்டது. அதுவும் பிளவுபட்டிருக்கும் ஒரு கோஷ்டியினருக்கு மாத்திரம் கொடுக்கப்பட்டது. திருவாளர்கள்: மஜீத் மரைக்கார், தங்கையா எம். எஸ். ராஜன், முதலானோர் முறையே தலைவராகவும் உபதலைவராகவும் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனராம். இவர்களைத் தேர்ந்தெடுத்ததற்கு காங்கிரஸ் கட்சியிலேயே ஒரு மாபெரும் எதிர்ப்புக் கோஷ்டியினர் குமுறிக் கொண்டிருக்கின்றனர்.

### மற்றொரு கூட்டம்

பழைய அதாவது தற்போதைய மண்டலக் காங்கிரஸ் தலைவர் தலைமையில் விரைவில் ஒரு காங்கிரஸ் கட்சிக் கூட்டம் நடைபெறுமென்றும் அதிலும் மண்டலக் காங்கிரஸிற்கு தலைவர், உபதலைவர், செயலாளர் தேர்ந்தெடுக்கப்படுவார்களென்றும் சொல்லப்படுகிறது. இத்துடன் வரும் இடைத்தேர்தலிலும் இரு கோஷ்டியிலும் அபேட்சகர்கள் போட்டியிடலாமெனக் கூறப்படுகிறது.

இப்படிக் காங்கிரஸார் போட்டி போட்டுக்கொண்டு இருப்பதால், ஐ என் டி யு சி. தொழிற்சங்கத்திலுள்ள தொழிலாளர்கள் படும் அவதி பொதுமக்களும் வியாபாரிகளும் பார்த்து அனுதாபப்படும் நிலையில் இருக்கிறது. இதனால் ஐ. என் டி யு.சி தொழிற்சங்கத்தின் தேவிகுளம் கோட்டத் தொழிலாளர்கள் நம்பிக்கையிழந்து வருகிறார்கள். ந-மி

# ஏ. ஐ. டி. யு. சி. கட்டிட நிதி

## மதுரை ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன் ரூ. 60

மதுரை, அக். 7—

மதுரை ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன். ஏ ஐ டி. யு. சி. (அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரஸ்) கட்டிட நிதிக்கு, டில்லியில் உள்ள தலைமைக் காரியாலயத்திற்கு ரூ 60 முதல் தவணையாக அனுப்பியுள்ளது மேலும் வசூல் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

# போர்ச்சுகலின் ஆணவப் போக்கு

## மேனன் வன்மையான கண்டனம்

ஐக்கியநாடுகள், நியூயார்க் அக் 7-

போர்த்துகீஸிய சர்க்காரின் பிரதிநிதி நேற்றையதினம் ஐ. நா. சபையில் பேசியது ஐக்கியநாடுகளின் சாஸனத்திற்கே சவால் விடுவதாக இருக்கிறது என்று இந்திய பாதுகாப்பு மந்திரி திரு. வி. கே. கிருஷ்ண மேனன் இன்று இங்கு கூறினர்.

நேற்றைய தினம் போர்த்துகீஸியப் பிரதிநிதி பேசுகையில் "உலக ஸ்தாபனத்திற்குத் தகவல் தெரிவிப்பதற்குத் தன்னிடம் அடிமை நாடுகள் ஒன்றுமில்லை", என்று கூறியிருந்தார், இதைக் குறித்தே கிருஷ்ணமேனன் மேற்கண்டவாறு குறிப்பிட்டார்,

மேனன் மேலும் பேசுகையில், தங்கள் நாடு அல்லாத இதர பிரதேசங்களின் மீது நிர்வாகம் செய்யும் ஐ. நா. உறுப்பினர்கள் அப்பிரதேசங்களிலுள்ள மக்களின் நல்வாழ்க்கைக்கும் பொறுப்பு எடுத்துக் கொள்கிறார்கள் என்றும், அவர்கள் அந்நாடுகளிலுள்ள பொருளாதார சமூக நிலைமைகளைப் பற்றி தொடர்ந்து ஐ. நா சபைக்குத் தகவல் கொடுக்கவேண்டும் என்று ஐ. நா. பொதுச்சபையின் தர்மகர்த்தாக் கமிட்டி முடிவு செய்துள்ளது என்றும் மேனன் கூறினர்.

போர்த்துகீசிய நாட்டில் வயது வந்தோர் அனைவருக்கும் ஓட்டுரிமை இருக்கிறது என்று இந்த சபையில் கூறப்பட்டது. ஆனால் போர்த்துகீசிய சட்டத்தில் ஒரு நீக்ரோவுக்கு சம உரிமைகள் கிடையாது என்று மேனன் கூறினர்.

ஆப்பிரிக்கா முழுவதிலும் ஏராளமான மக்களின் தலைமீது விடுதலைக்கொடி பறக்கவில்லை ஆனால் ஏகாதிபத்தியத்தின் அடிமைத் தளைகளின் கொடிதான் அதாவது காலனியாதிக்கக் கொடிதான் பறக்கிறது என்று மேனன் கூறினர்.

# சீன தேசிய தினம்

## தமிழ்நாட்டில் கொண்டாட்டம்

திருச்செங்கோடு, அக் 6—

அக்டோபர் முதல் தேதி திருச்செங்கோட்டில் சீனத் தேசியத் தினம் கொண்டாடப்பட்டது. கம்யூனிஸ்ட் கட்சி கிளை ஆபீஸ் முன் தோரணங்கள் கட்டி, செங்கொடி ஏற்றிவைக்கப்பட்டது. 70 மைல்களில் கட்சித் தோழர்கள் ஆதரவாளர் ஜெயகோஷத்துடன் ஊர்வலம் வந்தனர். ஊர்வலம் திருச்செங்கோடு டவுனையும், இராஜாக்கவுண்டர் பாளையம், சூரியம்பாளையம், சட்டையம்புதூர் ஆகிய ஊர்களையும் சுற்றிவந்தது.

பிறகு தோழர் கே. சண்முகம் தலைமையில் கூட்டம் நடந்தது. வி. ராமசாமி, டி. எஸ். அர்த்தநாரி முதலியவர்கள், மக்கள் சீனாவின் சாதனைகளை விவரித்துப் பேசினர்.

சீன-இந்திய எல்லை பிரச்சினையைச் சமாதான முறையில் தீர்த்துக்கொள்ளவேண்டுமென்றும் விலைவாசி உயர்வை கட்டுப்படுத்தவேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேறின.

### குடியாமலையில்

குடியாமலை கட்சிக் கிளையின் சார்பில் ஊர்வலம், பொதுக்கூட்டம் நடந்தன. ஊர்வலம் சேரனூர் கிராமத்திற்கும் சென்றது. எம். அருணாசலம் கொடி ஏற்றினர். விவசாயிகளும் பெண்களும் கோஷங்களுடன் ஊர்வலத்தில் கலந்துகொண்டனர்.

தோழர் அ. அடைக்கலம் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது. தோழர்கள் எம். அருணாசலம், எம். மாரியப்பன், ஐ. லா. ஜோஸப்ராஜ், ராம பிச்சைமுத்து ஆகியோர் பேசினர்.

சீன-இந்திய சமரசத்தை வற்புறுத்தியும் விலைவாசிகளைக் கட்டுப்படுத்த வேண்டுமென்றும் 1959-ம் ஆண்டு இறுதிக்குள் நில உச்சவரம்பு சட்டம் (?) கொண்டுவர வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேறின.

# சோஷலிசம் இறுதி லட்சியமல்லவாம்!

## "தனியார் தொழில்களை தேசியமயமாக்க மாட்டோம்"

### அமெரிக்க முதலாளிகள் முன் மொரார்ஜி தேசாய் அறிவிப்பு

நியூயார்க், அக் 7—

நிபந்தனையற்ற அந்நிய மூலதன உதவியை நாங்கள் வரவேற்கிறோம் என்று இந்திய நிதி மந்திரி மொரார்ஜி தேசாய் நேற்று பத்திரிகை நிருபர்களிடையே பேசும்போது கூறினர். நாங்கள் வேண்டுவது சுதந்திர முயற்சிகள். ஆனால் சுதந்திரமின்றி (?) சுபிட்சம் நன்மை பயக்காது. இரண்டில் எது வேண்டுமென்று கேட்டால் நாங்கள் சுதந்திரத்தைத் தான் தேர்ந்தெடுப்போம் என்றார். தேசாய் மேலும் பேசுகையில் அடுத்த சில ஆண்டுகளுக்காவது, இந்தியா அடுத்த நாடுகளின் பொருளாதார உதவியை பெறவேண்டியது வரும் என்றார்.

### சோஷலிசம் அல்லவாம்

இந்தியாவின் இறுதி லட்சியம் சோஷலிசம் என்பதை மொரார்ஜி தேசாய் மறுத்தார். தனியார் முதலீடுகள் கடைசியில் தேசிய மயமாக்கப்பட்டுவிடுமென்று பயத்தை போக்குவதில் அதிக ஆர்வம் காட்டுபவன் என்று தன்னை கூறிக்கொண்டார்.

### தேசாயின் ஜனநாயகம் எது?

எங்களுக்கொரு ஜனநாயகம் உண்டு அந்த ஜனநாயக கோட்பாடுகளுக்கு எதிராக நாங்கள் எதுவும் செய்யமாட்டோம். இதற்கு மேலாக மூலதனம் செய்பவர்களுக்கும் அவர்கள் பணத்திற்கும் எந்தவித ஆபத்தும் வராது என்பதற்கு வேறென்ன உறுதிமொழி வேண்டும் என்று கேட்டார்.

# குழந்தைகள் தினம்

## பதிப்பாளருக்கு வேண்டுகோள்

சென்னை, அக். 8—

குழந்தை எழுத்தாளர் சங்கத் தலைவர் திரு அழ. வள்ளியப்பா பதிப்பாளருக்கு விடுக்கும் ஒரு வேண்டுகோள்:—

கடந்த இரு ஆண்டுகளாக நவம்பர் 14-ம் தேதியன்று குழந்தைப் புத்தகங்கள் வெளியிட்டுக் குழந்தைகள் தினத்தை மிகவும் சிறப்பாகக் குழந்தைகள் தினத்தைச் சிறப்பாகக் குழந்தை எழுத்தாளர் சங்கம், கொண்டாடி வருவதை பதிப்பாளர்கள் நன்கு அறிவர். இந்த ஆண்டும் பதிப்பாளர்கள் ஒத்துழைப்புடன் கொண்டாட இச்சங்கம் முடிவு செய்துள்ளது.

பதிப்பாளர் ஒவ்வொருவரும் குறைந்தது ஒரு குழந்தை புத்தகமாவது அந்த நன்னாளில் வெளியிட்டு, குழந்தைகள் மகிழ்ச்சியைப் பெருக்கவேண்டும் என சங்கச் சார்பில் கேட்டுக்கொள்ளுகிறேன். இவ்வேண்டுகோளுக்கிணங்கிப் பதிப்பாளர்கள் தயாரிக்கும் புத்தகங்கள் சங்கச் சார்பில் வரும் நவம்பர் 14ல் சென்னையில் நடைபெறும் குழந்தைகள் தின விழாவில் தக்கவர்களைக் கொண்டு வெளியிட்டு வைக்கப்பெறும்.

குழந்தைகள் தினத்தில் புத்தகங்கள் வெளியிட விரும்புவோர் சங்கச் செயலாளருக்கு உடனே அறிவித்தால் உதவியாயிருக்கும். முகவரி—செயலாளர், குழந்தை எழுத்தாளர் சங்கம், 10, வைத்தியராமய்யர் தெரு, சென்னை-17

# 6-வது பெற்றோர்கள் விசேஷ மகாநாடு

சென்னை, அக். 6—

சென்னை, தமிழ்நாட்டுப் பெற்றோர்கள் மத்திய சங்கத்தின் செயலாளர் திரு. லா. சா. மணி எழுதுவதாவது:

தமிழ்நாட்டுப் பெற்றோர்கள் மத்திய சங்கத்தின் ஆதரவில் 6-வது பெற்றோர்கள் விசேஷ மகாநாடு நாளது 1959 அக்டோபர் மாதம் 11-ம் தேதி ஞாயிறு மாலை 4 15 மணிக்கு மயிலாப்பூர் பி எஸ் ஹைஸ்கூல் மண்டபத்தில் கூடும்.

நம் நாட்டு மணிக் கொடியை திரு. ஜி இராஜமன்னார் செட்டி. எம். ஏ ஏற்றுவைப்பார்.

மகாநாட்டை சென்னை கார்ப்பொரேஷன் கமிஷனர் திரு. என். சங்கரன் துவக்கி வைப்பார்.

எழும்பூர் ராஜதானி மகளிர் உயர்தர பாடசாலை முதல்வர் திருமதி ஆர். காந்திமதி அம்மையார் எம். ஏ., பி. டி. அவர்கள் மகாநாட்டுக்குத் தலைமைதாங்க இசைந்துள்ளார்கள்.

10-10-59 மாலை 5-30 மணிக்கு பெற்றோர்கள் சங்கத்தின் 4-வது ஆண்டுவிழா நடைபெறும்.

சென்னை சர்க்கார் உள் விவகார அமைச்சர் கனம் திரு. ம. பக்தவத்சலம் அவர்கள் தலைமை வகிக்க இசைந்துள்ளார்கள்.

பெற்றோர்கள் தங்கள் குறைகளையும் இதர யோசனைகளையும் பின்வரும் முகவரிக்கு அனுப்பவும்.

லா. சா. மணி, 46, வாயில்ஸ் ரோடு, சென்னை-14.

# பொதுநல ஊழியர் சங்கம்

சென்னை, அக். 6—

கோடம்பாக்கம் ... கிராமம் பொதுநல ஊழியர் சங்கத் திறப்புவிழா 6-9-59ல் நடந்தது. நகரசபை உறுப்பினர் திரு. எஸ். கிருஷ்ணமூர்த்தி சங்கத்தை திறந்து வைத்தார். திரு எஸ். பி செல்லப்பா, தோழர் எஸ். பி. வெளிசங்கர் பேசினர்.

# பத்திரிகை செய்தி தணிக்கை அமுலாகிறது

## இலங்கை சர்க்கார் முடிவு

கொழும்பு, அக் 6—

இலங்கை அரசாங்கம் இன்றிரவு முதல் பத்திரிகைச் செய்தி தணிக்கையை அமுலுக்குக் கொண்டுவந்துள்ளதாகக் கூறப்படுகிறது.

பண்டாரநாயகாவின் படுகொலையை ஒட்டி ராஜ்ய அவசரநிலையை உத்தேசித்து இந்நடவடிக்கை எடுக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது.

### கடுமையான தணிக்கை

பண்டாரநாயகாவின் இறப்பை ஒட்டிய புலன் விசாரணை நடவடிக்கை ஆகிய விஷயங்கள் தணிக்கையில் அடங்குமென்று இலங்கை அரசாங்க கெஜட் அறிக்கை கூறுகிறது.

மேலும் பண்டாரநாயகாவின் இறப்பிற்கு காரணமாயிருந்தார்கள் அல்லது உடந்தையாயிருந்தார்கள் என்று ஆலோசனை கூறுவதும் அவ்விஷயங்களை வெளிப்படுத்துவதும் அத்தணிக்கைக்குள் அடங்குமென்றும் கூறப்படுகிறது.

### காரணங்கள் கூறப்படவில்லை

அரசாங்கத்தின் மீது வெறுப்பை உண்டுபண்ணுவது பலாத்கார நடவடிக்கைகள், பொதுக்கூட்டங்கள், ஊர்வலங்கள் இராணுவ வீரர்களின் நடமாட்டத்தைக் கண்டிப்பது போன்ற விஷயங்களும் தணிக்கைக்குள் கொண்டுவரப்பட்டுள்ளன.

மந்திரி சபையின் இரண்டு மணிநேர விவாதத்திற்கு பிறகு இத்தணிக்கையைப்பற்றிய முடிவு எடுக்கப்பட்டதாம்.

இம்முடிவு எடுக்கப்பட்டதற்கான காரணங்கள் வெளிப்படையாகக் கூறப்படவில்லை, ஆனால் பிரதமரின் கொலைக்கு துணை புரிந்த சதித் திட்டங்களையும் அதில் யார் ஈடுபட்டிருந்தார்கள் அரசாங்கத் தரப்பிலும் எதிர் கட்சித் தரப்பிலும் யார் உடந்தையாயிருந்திருந்தார்கள் என்பதை கண்டுபிடிப்பதற்கு உதவியாக இருக்கும் என்று அனுமானிக்கப்படுகிறது. (பி.டி.ஐ)

# காங்கிரசிலிருந்து மாஜி 'கோழி' கட்சி வெளியேறுகிறது!

கடலூர், அக் 8—

கடந்த பொதுத் தேர்தலுக்கு முன்னால் காங்கிரசில் சேர்ந்த வன்னியர் குல சங்கத்தார் காங்கிரசிலிருந்து வெளியேறுவதென முடிவு செய்திருக்கிறார்கள் என்று தெரிகிறது.

தென் ஆற்காடு, வட ஆற்காடு செங்கல்பட்டு, திருச்சி முதலிய மாவட்டங்களின் வன்னிய சங்கப் பிரதிநிதிகளின் ரகசியக் கூட்டம் இங்கு நடைபெற்றதாகக் கூறப்படுகிறது. கூட்டத்திற்கு முன்னாள் காங்கிரஸ் மந்திரி எஸ். எஸ். ராமசாமி படையாச்சி தலைமை வகித்தார்.

300 பிரதிநிதிகள் கலந்துகொண்ட இக்கூட்டம் 3 மணி நேரம் நடைபெற்றது. பிரிந்து செல்லும் கோழிச் சின்னக் கட்சி மீண்டும் ஏதாவது கட்சியில் இணைவதா அல்லது தனித்து இயங்குவதா என்று இன்னும் முடிவு செய்யவில்லை, என்று கூறப்படுகிறது.

# போலீஸ் கெடுபிடிகளுக்கு கண்டனம்

## தமிழ்நாடு மோட்டார் தொழிலாளர் சம்மேளன மகாநாட்டில் தீர்மானம்

### வேலைநேரம் 8 மணி ஆகவேண்டுமென வற்புறுத்தல்

பெரியகுளம், அக். 4—

வருகிற ஜனவரி 3-ந் தேதி மோட்டார் தொழிலாளர் கோரிக்கை தினம் அனுசரிப்பதென்றும் இலவன்ன சிப்பந்திகள் தொகையான 5000-யை 10,000 ஆக இரட்டிப்பதென்றும் தமிழ்நாடு மோட்டார் தொழிலாளர் சம்மேளனத்தின் 3-வது மகாநாடு முடிவு செய்தது. இதர தீர்மானங்கள் ஏற்கனவே 'ஜனசக்தி'யில் பிரசுரமாகியுள்ளன.

சம்மேளனத்தின் செங்கொடியைத் தென் பிராந்திய ரயில்வே லேபர் யூனியன் பொதுக்காரியதரிசி தோழர் சதீஷ் அனந்தம்பியார் ஏற்றிவைத்தார். அவர் பேசுகையில், "பல்லவன்டுளைகாக தொழிலாளி வர்க்கம், செங்கொடியின் கீழ் திரண்டு நின்று வருகிறது. 8 மணி நேர வேலை பகல் கிட்டாத, என்பதை இன்று உலக நியதி என்ற போதிலும் ... ஆனால் இந்திய சுதந்திரம் பெற்று 12 ஆண்டுகளாகியும் இந்தக் கோரிக்கைக்காக நாம் போராட வேண்டிய நிலைமை இருந்து வருவது மகா துர்திஷ்டமே. இந்தச் சிகேட்டைப்போக்க, ஒன்றுபட்டு சாஸ்டாலைவர்க்கம் போராட வேண்டும்" என்றார்.

மோட்டார் தொழிலாளர் திரண்டு நின்றுல் ரயில்வே தொழிலாளர் சங்கத்தைவிட பெரிதாக முடியுமென்றும் நம்பியார் குறிப்பிட்டார். ரயில்வே நிர்வாகத்தின் நிறைவைக் குறைவை மறைக்க மோட்டார் தொழிலின் வளர்ச்சியைத் தாக்கி போட்டியை உண்டுபண்ணுகிறார்கள். சிறு பஸ், லாரி முதலாளிகளை ஒழித்து பெரும் முதலாளிகளை வளர்ப்பதற்காக இவ்வாறு நிர்ப்பந்த போட்டு முதலாளிகளை போட்டிக் கருத்தே கிளப்பிவிடுகிறார்கள் என்றார்.

கேரளத்தில் மோட்டார் தொழிலாளருக்கு நல்ல வசதிகளைக் கேரள சர்க்கார் செய்து கொடுத்திருப்பதையும் நம்பியார் சுட்டிக் காட்டினார்.

**வரவேற்புரை**

வரவேற்பு கமிட்டி தலைவர் தோழர் எம். என். ஆதிநாராயணன் எல்லோரையும் வரவேற்றுப் பேசுகையில், தொழிலாளர் விஷயத்தில் சென்னை சர்க்காரின் விரோதபோக்கான கொள்கையைக் கண்டித்தார்.

**கே. டி. கே. தங்கமணியின் தலைமை உரை**

தோழர் கே. டி. கே. தங்கமணி தமது தலைமை உரையில் குறிப்பிட்டதாவது:

தமிழ்நாடு மோட்டார் தொழிலாளர் சம்மேளனத்தின் 2-வது மகாநாடு 1955-ம் ஆண்டு மேட்டுப்பாளையத்தில் நடந்தது. அதன் பிறகு 4-ஆண்டுகள் கழித்து 3-வது மகாநாடு நடக்கிறது. தமிழ்நாடு மோட்டார் தொழிலாளர் சம்மேளனம் ஒன்றுதான் மிகப் பெரிய ஸ்தாபனம். மோட்டார் தொழிலாளர்களுக்கு அப்படி விருதுகள் இந்த ஸ்தாபனத்திற்கு இன்னும் அங்கீகாரமும் பிரதிநிதித்துவமும் ஏற்படவில்லை. இதற்காக தொழிலாளர் போராட வேண்டும்" என்றார்.

அகில இந்திய மோட்டார் தொழிலாளர் சம்மேளனப் பொதுக் காரியதரிசி தோழர் சதீஷ் சாட்டர்ஜியையும் ஆந்திர மாகாண சர்க்கார் போக்குவரத்து தொழிலாளர் சங்கக் காரியதரிசி அஞ்சையாவையும் தோழர் கே. டி. கே. தங்கமணி பிரதிநிதிகளுக்கு அறிமுகம் செய்துவைத்து அவ்விருவரது சேவைகளையும் பாராட்டினார்.

தலைவர் கே. டி. கே. தொடர்ந்து பேசுகையில், 20 பேர் பணியாற்றும் ஸ்தாபனங்களிலும் பிராவிடெண்ட் நிதி ஏற்படுத்த வேண்டுமென்பதற்காக நாம் ஒன்றுபட்டுப் போராட வேண்டுமென்றார்.

**தோழர் கே. எம். சுந்தரம் பேச்சு**

ஆண்டு அறிக்கையைச் சமர்ப்பித்து தோழர் கே. எம். சுந்தரம் பேசுகையில் "இப்பொழுது ரயில்வே போக்குவரத்தைவிடச் சிறந்ததும் சௌகரியமானதும் மக்களால் போற்றப்படுவதுமான மோட்டார் தொழிலை சர்க்கார் புறக்கணிப்பதை இம் மகாநாடு கண்டிக்கவேண்டும். மோட்டார் தொழில் தேசியமயமாக்கப்பட்டால்தான் தொழிலாளரும் உரிமை பெறலாம்; நாட்டிற்கும் நன்மை என்றார்.

ஆண்டறிக்கை விவாதத்தில் தோழர் தண்டபாணி (மதுரை), செல்வராஜ் (சேலம்) ஆர். கோவிந்தராசலு (மதுரை), மாரியப்பன் (தஞ்சை), கந்தசாமி (புதுக்கோட்டை) இராமலிங்கம், (பொள்ளாச்சி), ராமையா (தேனி) ஆகியோர் கலந்து கொண்டனர்.

**ஊர்வலமும் பொதுக்கூட்டமும்**

இம்மாநாட்டையொட்டி 4ந்தேதி மாபெரும் ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடந்தன.

மகாநாடு நடந்த சர்க்கரை செட்டியார் பந்தலிலிருந்து நூற்றுக்கணக்கான தொழிலாளர்கள் செங்கொடிகளுடன், '8 மணி நேர வேலை வேண்டும்,' 'மோட்டார் தொழிலை தேசியமாக்கு,' 'விலைவாசியைக் கட்டுப்படுத்து' 'நிலவுடைமைக்கு வரம்புகட்டு' என்ற கோஷங்களுடன் ஊர்வலமாக வந்தனர். முக்கிய வீதிகளின் வழியாக ஊர்வலம் சுற்றி வந்தது.

**பொதுக்கூட்டம்**

இன்று நடந்த பொதுக்கூட்டத்திற்குச் சம்மேளனத் தலைவர் தோழர் கே. டி. கே. தங்கமணி தலைமை வகித்தார். இவர் கூறியதாவது: "தொழிலாளர்களைப் பிளவுபடுத்தி உரிமைகளைப் பாதிப்பதற்காகவே முதலாளி, உள் சங்கத்தை ஆரம்பித்திருக்கிறார். அந்தக் கம்பெனி சங்கம் தொழிலாளருக்குப் பாடுபடாது தொழிலாளருக்கு உண்மையாகப் பாடுபடக் கூடியது தொழிலாளர் சங்கம்தான். பண் முதலாளிகள் பக்கம் சர்க்கார் இருக்கலாம், சம்மேளனம் சும்மா யிருக்காது."

அகில இந்திய மோட்டார் தொழிலாளர் சம்மேளனத் தலைவர் தோழர் சதீஷ் சாட்டர்ஜியும் பேசினார். மோட்டார் தொழிலாளர் அதிக நேரம் வேலை பார்ப்பதால்தான் விபத்து ஏற்படுகிறதென்றும் தொழிலாளருக்கு சௌகரியங்கள் செய்து கொடுத்து சர்க்கார் அவர்களது வாழ்க்கை தரத்தை உயர்த்த வேண்டுமென்றும் வற்புறுத்தினார். தொழிலாளர்கள் தங்கள் கோரிக்கைகளுக்காகப் போராடினால் வெற்றி பெறுவது நிச்சயம் என்று முடித்தார்.

மதுரை பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத் தலைவர் தோழர் ஏ. பாலசுப்ரமண்யம் பேசினார். உணவு பிரச்சினையைத் தீர்க்க சர்க்கார் தவறிவிட்டதைக் கண்டித்தார்.

தோழர் எம். என். ஆதிநாராயணன் நன்றி கூறினார்.

**இறுதிநாள் நிகழ்ச்சி**

மகாநாட்டின் இறுதி நாள் நிகழ்ச்சியில் தோழர் நாராயணசாமி செட்டியார் தலைமை வகித்தார்.

**போலீஸ் அட்டூழியம்**

தஞ்சை தோழர் கே. ஆர். சந்திரன் போலீஸ் அட்டூழியம் பற்றிய தீர்மானத்தின் பேரில் பேசுகையில் போலீசார் சட்ட வரம்பை மீறி தங்கள் இஷ்டம் போல் நடந்து தொழிலாளர்களைக் கொடுமை படுத்துகிறார்கள் என்றார்.

இத்தீர்மானத்தைத் தோழர் ரங்கசாமி ஆதரித்துப் பேசினார்.

தோழர் சீனிவாசன் (சென்னை) வருஷா வருஷம் சம்பள உயர்வு வேண்டுமென்று வற்புறுத்தினார்.

போலீசாரின் கொடுமைகளை கண்டித்து தோழர்கள் ஏ. டி. மாரியப்பன் (தஞ்சை), எம். சின்னச்சாமி, வெங்கடாசலம் (இராமநாதபுரம்), வெங்கடேசன் (கோவை), ஈஞ்சப்பன் (வேலூர்) முதலியோர் பேசினர்.

அடுத்து தோழர் கே. எம் சுந்தரம் 5 வருஷ வரவு—செலவு கணக்கைச் சமர்ப்பித்தார்.

**புது நிர்வாகிகள் தேர்வு**

1959-60 ஆண்டுக்கு பின்வரும் புது நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப் பட்டனர்:

தலைவர்: கே. டி. கே. தங்கமணி உப-தலைவர்கள்: நாராயணசாமி செட்டியார் (மேட்டுப்பாளையம்) ஏ. எல். கே. அய்யங்கார் (சென்னை), பொதுச்செயலாளர். கே. எம். சுந்தரம், உதவி காரியதரிசி: செல்வராஜ் (சேலம்), பொருளாளர் பி. சி. கிருஷ்ணன், நிர்வாக கமிட்டிக்கு டி. ஆர். சுப்ரமண்யம் (பெரியகுளம்) முதலிய 17 உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# முஸ்லிம் லீக் வளருவது பிடிக்கவில்லையாம்!

## ஆனால் கேரளத்தில் கூட்டணி சரிதானும்

### நிருபர் கேள்விக்கு நேரு மழுப்பல்

புதுடில்லி, அக். 8—

பிரதமர் நேரு இன்று முஸ்லீம் லீகைப் பற்றி வழக்கம்போல் இரட்டை நாக்குடன் பேசினார். முஸ்லீம் லீக் மீண்டும் இந்தியாவில் தலையெடுத்துவருவதை தாம் வெறுப்பதாகக் கூறினார். அதே சமயத்தில் கேரளத்தில் முஸ்லீம் லீகுடன் காங்கிரஸ் கட்சி கூடிக் குலாவுவதைப் பற்றிக் கேள்வி கேட்டபோது, ஏதேதோ சொல்லி மழுப்பினார்.

இன்று நேரு பேசுகையில், 'இந்தியாவின் பல ராஜ்யங்களில் பழைய முஸ்லீம் லீகை உயிர்ப்பிக்கச் செய்யவும் முயற்சிகளைதான் வெறுப்பதாகவும், அவற்றை உற்சாகப் படுத்தத்தான் விரும்பவில்லையென்றும்" பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில் கூறினார்.

மேலும் அவர், "தன்னைப் பொறுத்த வரையில் வகுப்புவாதத்துடன் ஒருக்காலும் சம்பந்தம் வைத்துக் கொள்ள விரும்பவில்லை" என்றும் கூறினார்.

**கேரளத்தைப் பற்றி என்ன சொல்கிறீர்?**

கேரளத்தில் காங்கிரஸ் கட்சியானது முஸ்லீம் லீகுடன் தேர்தல் உடன்பாடு செய்து கொண்டிருப்பதைப் பற்றியும், இந்திய யூனியன் முஸ்லீம் லீக் தலைவர் லீக் ஸ்தாபனத்தை பம்பாயிலும், ஆந்திராவிலும், உத்தரப்பிரதேசத்திலும், மற்றும் பல ராஜ்யங்களிலும் உயிர்ப்பிக்கப் போவதாக எடுத்துக் கொண்டிருக்கும் முயற்சிகளைப் பற்றியும் என்ன அபிப்பிராயப்படுகிறீர்கள் என்று ஒரு நிருபர் ஒரு கேள்வியைப் போட்டு வைத்தார்.

அதற்கு நேரு கூறிய பதிலாவது "கேரளத்தில் சில தொகுதிகளில் காங்கிரஸ் போட்டியிடுவதில்லையென்று தேர்தல் உடன்பாடு ஏற்பட்டதே தவிர வேறு ஒன்றுமில்லை. இதைப்போய் முஸ்லீம் லீகுடன் கூட்டணி என்றோ அல்லது அதுபோன்ற ஏதோ ஒன்று என்றோ என்று நினைப்பது சரியல்ல. மத்திய காங்கிரஸ் ஸ்தாபனமோ அல்லது கேரளக் காங்கிரஸோ என்ன செய்துள்ளார்கள் என்று எனக்குத் தெரியாது. மந்திரி சபையில் லீகுக்கு பதவி கொடுப்பது பற்றி எந்தவிதமான வாக்குறுதியும் கொடுக்கவில்லை"

**எதுவும் கூறமுடியாது**

"தேர்தலில் காங்கிரஸ்ஜெயித்து விட்டால், நீங்கள் முஸ்லீம் லீகர் ஒருவரை மந்திரியாக நியமிக்க மாட்டீர்கள் என்று அர்த்தமா?" என்று நிருபர் கேட்டார். அதற்கு நேரு "காங்கிரஸ் தேர்தலில் ஜெயித்த பிற்பாடு, என்ன நடக்கும் என்று என்னால் இப்போது கூறமுடியாது இக்கேள்விக்கு பதில் அளிப்பதும் கஷ்டமான காரியம்" என்றார்.

**பிரச்னைகளின் பேரில்**

"முஸ்லீம் லீக் ஓர் வகுப்புவாத ஸ்தாபனமாக இருந்த போதிலுங்கூட, அது காங்கிரஸின் அடிப்படைக் கொள்கையை ஒத்துக் கொண்டிருப்பதினாலே, அதை ஊக்குவிக்க வேண்டாமா" என்றுகேள்வி கேட்டார் ஒரு நிருபர்.

அதற்கு நேரு, "ஒவ்வொரு விஷயத்தையும் பிரச்னைகளின் பேரில்தான் அதை முடிவு செய்ய முடியுமென்றும், கேரள முஸ்லீம் லீக் காங்கிரஸ் திட்டத்தை ஒப்புக் கொண்டிருப்பதினால்தான் ஸ்தானங்கள் ஒதுக்குவது பற்றி பேச்சு பேசப்படுகிறதென்றும், எதிர்பாக இருந்தால் அந்தப் பேச்சே இருந்திருக்காது" என்றும் கூறினார்.

**அவர் பேச்சு அவரோடு**

அலஹாபாத்தில் லால் பகதூர் சாஸ்திரி பேசும் போது, "வகுப்புவாத ஸ்தாபனங்களைத் தடைசெய்ய அரசாங்கம் உத்தேசித்திருப்பதாகத் தெரிவித்தாரே, அதுபற்றி உங்கள் அபிப்பிராயமென்னவென்று நிருபர் கேட்டதற்கு நேரு, "அவர் என்ன சொன்னார் என்பதைப்பற்றி நான் என்ன அபிப்பிராயம் கூறுவது?" என்று கூறினார்.



புதுக்கோட்டையில் நடைபெற்ற பாரதி விழாவில் பாரதியார் படம் யானை மீது ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படும் காட்சி.

# மலிவு தானியக் கடைகள் வேண்டும்

## குடிதண்ணீர் நெருக்கடி தீர நடவடிக்கை எடுத்துக் கொள்க

### அருப்புக்கோட்டை தாசில்தாரிடம் கம்யூனிஸ்ட் கட்சி, விவசாய சங்க மகஜர்

அருப்புக்கோட்டை, அக். 6—

அருப்புக்கோட்டைத் தாலூகா தாசில்தாரை தாலூகா கம்யூனிஸ்ட் கட்சி, விவசாயிகள் சங்கம், நெசவாளர் சங்கம் ஆகியவற்றின் பிரதிநிதிகள் தோழர்கள் ஆர். எச். நாதன், எம். கிருஷ்ணன் தலைமையில் 28-8-59ல் பேட்டிகண்டு கோரிக்கைகள் அடங்கிய மகஜரை கொடுத்தனர்.

**கோரிக்கைகள்**

1. மலைப்பட்டி, ஆமணக்கு நத்தம், குருந்தமடம், வெள்ளையாபுரம், செட்டி குறிச்சி, பெரிய தும்மக் குண்டு ஆகிய இடங்களில் மலிவு தானியக் கடைகள் திறக்க வேண்டும். நகரில் வார்டு தோறும் நியாயவிலைக் கடைகள் திறந்து நல்ல அரிசி விநியோகிக்க வேண்டும்.

2. முதல் ஐந்தாண்டு திட்டத்தில் சேர்க்கப்பட்ட கிராயூர் அணைக்கட்டுத் திட்டம், 1949ல் சர்வே செய்யப்பட்ட திருவிருந்தான்புரம் கண்மாய் ஆகியவை நிறைவேற்றப்பட வேண்டும். குண்டாற்றில் ஆனைக்குளம் கண்மாய் முகப்பில் தத்து அணை கட்டவேண்டும். ஆமணக்கு நத்தம் கண்மாய் அணைக்கட்டை (ரிப்பேர் செய்தும் தண்ணீர்வராததால்) உயர்த்திக் கட்டவேண்டும். பாலவனத்தம், மலைப்பட்டி, திருந்த மடம், பந்தல்குடி கண்மாய்களை ஆழப்படுத்தி அகலப்படுத்த வேண்டும்.

(3) பாலவனத்தம்-நெம்மேனி ரோடு, ஆமணக்கு நத்தம்-குருசாமிகோவில்ரோடு, ஆமணக்கு நத்தம் குருந்த மடம் மெட்டல் ரோடு பந்தல்குடி-நெம்மேனி ரோடு ஆரம்பிக்கப்படவேண்டும்.

4 குருந்தமடம், ஆமணக்கு நத்தம், கிராமத்தில் அரிஜனக் காலனி கட்ட வேண்டும்.

5 ஹோட்டல் வியாபாரிகள், பலசரக்கு சில்லரை வியாபாரிகள், சோடா சர்பத் வியாபாரிகளுக்கு, நிர்ணய விலையில் சீனி விநியோகிப்பதோடு மலிவு தானியக் கடைகள் மூலம் சீனி விநியோகிக்க வேண்டும்.

(6) கிராமங்களில் குடிதண்ணீர் கஷ்டம் இருப்பதால் கிணறுகளை ஆழப்படுத்த மான்யம் உதவுவதோடு புதிய கிணறுகள் வெட்ட வேண்டும். நகரில் குடிதண்ணீர் பிரச்சினை பெரும் பிரச்சினையாக இருப்பதால், பழைய கிணறுகளை ஆழப்படுத்த மான்யம் வழங்குவதோடு, டிராக்டரை அதிகப்படுத்தி தண்ணீர் சப்ளை செய்வதற்கும், அருப்புக்கோட்டையில் நிரந்தர குடிதண்ணீர் வசதி கிடைக்க இருக்கன்குடி அல்லது தாப்பாத்தி வைப்பாற்றிலிருந்து குடிதண்ணீர் கொண்டு வருவதற்கானத் திட்டத்தை நிறைவேற்ற நடவடிக்கை எடுக்க வேண்டும்.

மேற்கண்ட கோரிக்கைகளுடன், வரி பாக்கி வசூலை ஒத்திவைப்பது, சாகுபடிக்கு கடனுதவி, விவசாயத் தொழிலாளருக்கு நிவாரண வேலை அளிக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொள்ளப்பட்டது. மகஜரில் இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட கையெழுத்தும் சேகரிக்கப்பட்டது.

தாசில்தார் கோரிக்கை எல்லாவற்றையும் கவனிப்பதாகவும், வரி பாக்கிகளை ஒத்திவைத்திருப்பதாகவும் தெரிவித்ததாகத் தெரிகிறது. (ந. நி.)

# பண்டார நாயகா கொலையான சம்பவம்

## ஸ்காட்லந்த் யார்ட் துப்பறியும் நிபுணர் விசாரிப்பர்

கொழும்பு, அக். 8—

இலங்கைப் பிரதமர் பண்டார நாயகா கொலை செய்யப்பட்டது சம்பந்தமாக விசாரணை நடத்த ஸ்காட்லந்து யார்டைச் சேர்ந்த துப்பறியும் நிபுணர்களை அழைக்க இலங்கை சர்க்கார் யோசித்திருப்பதாகத் தெரிகிறது.

இந்தத் தகவலை இலங்கைப் பிரதமர் தகநாயகா வெளியிட்டார். இந்தக் கொலை சம்பந்தமான சகல விபரங்களையும் அம்பலமாக்க உறுதி கொண்டிருப்பதாகஅவர் குறிப்பிட்டார்.

## என். ஜி. ஓ. களுக்கு தீபாவளி அட்வான்ஸ்

### ரூ. 150 கொடுக்க சர்க்கார் மறுப்பு

சென்னை, அக். 8—

தீபாவளிக்கு அட்வான்சாக ரூ. 120-க்கு பதில் ரூ. 150 கொடுக்க வேண்டும் என்று சர்க்கார் ஊழியர் சார்பில் என். ஜி. ஓ. கள் முன் வைத்த கோரிக்கையை சர்க்கார் ஏற்க மறுத்து விட்டது.

அட்வான்ஸ் 15 நாட்களுக்கு முன் தரப்பட வேண்டும், 10 மாதத் தவணைகளில்பிடித்துக் கொள்ளப்பட வேண்டும் என்ற கோரிக்கைகளை ஏற்றுக்கொண்டுள்ளது.

## இ. எம். எஸ். கேரள சர்க்கார் ஆலோசகரை சந்தித்தார்

திருவனந்தபுரம், அக். 8—

கேரள மக்கள் தலைவர் தோழர் இ எம். எஸ். நம்பூதிரிபாட். கேரள மாநில கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் எம். என். கோவிந்த நாயர் ஆகியோர் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பாக கவர்னரின் ஆலோசகர் பி. வி. ஆர். ராவைச் சந்தித்துப் பேசினார்கள்.

மாவேலிக் கரை, செங்கனூர், திருவெல்லா ஆகிய திருவனந்தபுரம் மாவட்டத்தின் தாலூகாக்களின் நிலைமை படுமோசமாக இருப்பதையும், புலையர்களும், விவசாயத் தொழிலாளர்களும் தாக்கப்படுவதையும் எடுத்துக் கூறி அமைதி நிலவுவதற்கான நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று கோரினார்கள்.

கேரள இடைத் தேர்தல் ஜனவரி மாதத்திற்கு முன்னர் அல்லது மார்ச் மாத இறுதியில் நடைபெற வேண்டுமென்று கூறினார்கள். பிப்ரவரி, மார்ச் மாதம் குட்டநாடு பகுதியில் அறுவடை காலமாதலால் சுற்றுப்புற கிராமங்களிலிருந்து ஏராளமான விவசாயிகள் அறுவடைக்காகச் சென்று விடுவார்களென்றும், அதனால் பத்திற்கு மேல் பதினைந்து தொகுதிகள் வரை பாதிக்கப்படுமென்று கூறினார்கள்.

# சிநேகபாவமான கடிதம் நிலைமையில் அபிவிருத்தி

## சூ என்-லாய் கடிதம் பற்றி பிரதமர் நேரு கருத்து

### ராணுவ நடவடிக்கை இல்லை என்கிறார்

புதுடில்லி, அக் 8—

பிரதமர் நேரு சீனக் குடியரசின் பத்தாவது ஆண்டு விழாவிற்கு அனுப்பியிருந்த வாழ்த்துச் செய்திகுச் சீனப் பிரதமர் சூ என்-லாய் பதில் அனுப்பியுள்ளார்.

அந்தப் பதிலை பிரதமர் நேரு வரவேற்றார். கடிதம் சிநேகபாவமான முறையில் எழுதப்பட்டுள்ளது. எனவே நிலைமையில் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது என்பதை இது காட்டுகிறது என்றார்.

இப்போது எல்லைப் பிரச்சினை அரசாங்க மட்டத்தில் பேசப்படுகிறது. எனவே, சீன ஆக்கிரமித்துள்ள இந்திய பகுதிகளை மீட்க ராணுவ நடவடிக்கை எதுவும் இந்தியா எடுக்காது அவ்விதம் ராணுவ நடவடிக்கை எடுப்பதுரியாயமுமல்ல, விவேகமானதுமல்ல என்றார். அதே போது இப்போது உள்ள பகுதிகளுக்கப்பாலும் சீனப் படைகள் ஆக்கிரமிப்புத் தொடங்குமெனில் அந்த நடவடிக்கை எதிர்க்கப்படும் என்றார்.

மேலும் சீனர்கள் ஆக்கிரமித்துள்ள பகுதிகளை மீட்க இந்திய அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறது என்று பிரதமர் நேருவிடம் கேட்கப்பட்ட போது, இதுபற்றிய முதல் நடவடிக்கைதான் சீனப்பிரதமர் சூ-என்-லாய்க்கு தான் எழுதிய கடிதம் என்று குறிப்பிட்டுவிட்டு, நாம் ஒரு அரசாங்கம் என்றமுறையில் ஆத்திரப்படுதல் கூடாது. கோபப்படாமல் உறுதியுடன் செயல்பட வேண்டும் என்றார்.

**கம்யூனிஸ்ட் கட்சி தீர்மானம்**

இந்திய-சீன எல்லைத் தகராறு பற்றி இந்திய கம்யூனிஸ்ட் கட்சி நிறைவேற்றியுள்ள தீர்மானத்தைக் குறிப்பிட்டு விட்டுத்தான் அதை ஒப்புக்கொள்ளவில்லை என்றார் இது ஒரு அசாதாரணமான தீர்மானமாகும், என்று குறிப்பிட்டார்.

## இந்திரா காந்தியின் உபதேசம்!

ஜலந்தர், அக். 7—

இங்கு மாணவிகள், சமூக ஊழியர்கள் அடங்கிய ஒரு கூட்டத்தில் பேசுகையில் திருமதி இந்திரா காந்தி, மாணவர்கள் அரசியலில் தீவிரமாகப் பங்கெடுத்துக் கொள்ளக் கூடாது, என்று உபதேசம் செய்தார்.

"நீங்கள் நாட்டை எதிர்நோக்கும் பிரச்சினைகளைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். ஆர்ப்பாட்டங்களும், கிளர்ச்சிகளும் செய்யக் கூடாது. அவை உங்கள் வாழ்க்கையின் பொன்னான காலத்தை விரயமாக்குகின்றன" என்று அவர் மேலும் கூறினார்.

கேரளத்தில் கம்யூனிஸ்ட் மந்திரி சபையை எதிர்த்து பலாத்காரக் கிளர்ச்சிகளில் காங்கிரஸ் சார்புடைய மாணவர்களும் கலந்து கொண்டபோது அதைக் கண்டித்து ஒரு வார்த்தை கூறாத இந்திரா காந்தி அம்மையார்தான் தற்பொழுது வேறு மாகாணத்தில் மாணவர்களுக்கு இவ்வாறு ஹிதோபதேசம் செய்வதில் ஈடுபட்டுள்ளார்.

# மே. வங்கத்தில் வெள்ளச் சேதம்

## 20 லட்சம் மக்கள் பாதிக்கப்பட்டுள்ளனர்

### மிதுனபுரி ஜில்லாவில் 3 நதிகளில் உடைப்பு

கல்கத்தா, அக். 7—

சமீபத்தில் நிகழ்ந்த வெள்ளப் பெருக்கினால் இருபது லட்ச மக்கள் பாதிக்கப்பட்டுள்ளனரென்றும், மேற்கு வங்கத்தின் பகுதிக்கு மேற்பட்ட நிலப் பகுதி பாதிக்கப்பட்டதென்றும் அதிகாரபூர்வமான செய்தி கூறுகிறது

வங்க முதன் மந்திரி பி. ஸி. ராய் பத்திரிகை நிருபர்களிடையே பேசும்போது கூறியதாவது:

தற்போதுகூட புயலாலும், பேய் மழையாலும் பாதிக்கப்பட்ட இடங்களின் நிலையை நிர்ணயிக்க முடியவில்லை அநேக இடங்களின் விளைவை கணக்கிட முடியவில்லை. கால நிலை சீர்பட்டுவெள்ளப் பெருக்கு குறைந்த பிறகு தான் சரியான தகவல் கிடைக்குமென்று கூறினார்.

மிட்னப்பூர், பர்டான், ஹூக்ளி பிரதேசத்தில் தண்ணீர் ஓட்டம் குறைந்துள்ளதென்று கடைசிச்செய்தி கூறுகிறது. பாதிக்கப்பட்ட இடங்களில் இந்திய விமானப் படையினர் ஐயாயிரம் உணவு மூட்டைகளை போட்டதாகக் கூறப்படுகிறது.

மூர்ஷிதாபாத் ஜில்லாவில் 3 லட்சம் மக்கள் வெள்ளத்தால் சூழப்பட்ட இடங்களில் இன்னும் சிக்கியுள்ளனர்.

40 முதல் 50 பேர் வரை மாண்டதாகவும் தெரிகிறது.

**பள்ளி ஆசிரியரின் வீரமரணம்**

பர்பூமிக் ரஹ்மான் என்ற பள்ளி ஆசிரியர் நிவாரண வேலையில் ஈடுபட்டிருக்கையில் மாண்டார்.

**3 நதிகளில் வெள்ளம்**

மிதுனபூர் ஜில்லாவில் 3 நதிகள் உடைப்பு எடுத்து பெரும் வெள்ளச் சேதம் விளைவித்து விட்டன. நெல் பயிராகியுள்ள 120 000 ஏகர் நிலம் நீரில் மூழ்கிக் கிடக்கிறது. இந்த ஜில்லாவில் 8,000 வீடுகள் இடிந்து விட்டன. ஆறு பேர் மாண்டதாகத் தெரிகிறது.

உணவு இயக்கம்:

## தலைவர்கள் சுற்றுப்பிரயாணம்

**ஜீவா**

அ. 13 விழுப்புரம்
" 14 தெ. ஆற்காடு ஜில்லா
" 15 சென்னை
" 17 திருப்பத்தூர் (வ. ஆற்காடு ஜில்லா)
" 18 வேலூர்
" 22 திருச்சி
" 23 நாகர்கோவில்
" 25 கோயமுத்தூர்
" 28 பெருந்துறை
" 29 சென்னை

**என். சங்கரையா**

" 14 திருப்பத்தூர்
" 15 விருதுநகர்
" 16 ஸ்ரீவில்லிபுத்தூர்
" 18, 19 நெல்லை ஜில்லா

**கே.எஸ். பார்த்தசாரதி**

அக். 13, 14 காஞ்சிபுரம்
" 15 சைதாப்பேட்டை

## பாவலர் டி. வரதராஜன் குழுவினரின் பம்பாய் ஆமதாபாத் சுற்றுப் பிரயாணம்

சென்னை, அக். 7—

பம்பாய் ஜனநாயக வாலிபர் சங்கமும் ஆமதாபாத் முற்போக்கு வாலிபர் சங்கமும் அழைத்ததற்கிணங்க பாவலர் குழுவினர் இன்று மாலைசென்னையிலிருந்து புறப்பட்டனர். அங்கு பம்பாயிலும் ஆமதாபாத்திலும் நிகழ்ச்சிகள் நடத்த ஒரு மாத காலம் தங்கியிருப்பார்கள். நிகழ்ச்சிகளை முடித்துக்கொண்டு நவ. 4-ம் தேதி ஆமதாபாத்திலிருந்து புறப்பட்டு வருவார்கள். வரும் வழியில் சென்னையிலும் வடாற்காடு, செங்கற்பட்டு, தென்னாற்காடு ஜில்லாக்களிலும் நிகழ்ச்சி நடத்த விரும்புவோர் அடியிற் கண்ட விலாசத்துக்கு எழுதி நிகழ்ச்சிகளை ஊர்ஜிதம் செய்து கொள்ள வேண்டுகிறோம்.

Pavalar D. Varadarajan
C/o. Jeevan
Bombay Democratic
Youth League
No: 1. Nallakattawadi
Dharavi, Bombay.—17.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

விட அதேத்தொகுதியில் அதிகப்படியான வாக்குகளை பெற்றதே பெரும் மகிழ்ச்சிக்குக் காரணமாம். வட இங்கிலாந்தில்தான் கன்சர்வேடிவ் கட்சியினர் அதிகம் வெற்றி பெற்றிருப்பதாகக் கூறப்படுகிறது.

**சர்ச்சில் வெற்றி**

பிரிட்டனின் யுத்தகாலத் தலைவர் சர். வின்சன்ட் சர்ச்சில் வட்போர்டு தொகுதியில் வெற்றி பெற்றிருக்கிறார். முன்னால் கிடைத்த வாக்குகளைவிட சற்று குறைவாகத்தான் இப்போது வாக்குகளை பெற்றிருப்பதாகக் கூறப்படுகிறது.

**கெயிட்ஸ்கெல் வெற்றி**

தொழிற்கட்சித் தலைவர் கெயிட்ஸ்கெல் வெற்றி பெற்றிருக்கிறார். முன்னைவிட குறைவான வாக்குகள்தான் கிடைத்திருக்கிறதாம்.

**கட்சிகளின் நிலவரம்**

| | |
|---|---|
| மொத்த ஸ்தானங்கள் | 630 |
| வெளியானவை | 387 |
| கன்சர்வேடிவ் | 204 |
| தொழிற்கட்சி | 180 |
| லிபரல் கட்சி | 3 |

ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு, வெளியிட்டவர் எஸ். கிருஷ்ணசாமி
ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.
முகவரி: 32, பிராட்வே, சென்னை-1.
Janasakthi
Broadway, Madras-1.

# அகண்டவெளி அனுபவங்களை பரிமாறிக்கொள்ளலாம்

## சோவியத் யோசனையை அமெரிக்கா ஒப்புக்கொண்டது

நியூயார்க், அக் 7—

ஐக்கிய நாடுகள் சபையின் முன் முயற்சியில் அகண்டவெளி அனுபவங்களை பரிமாறிக் கொள்ள மகாநாடு கூட்ட வேண்டுமென்ற சோவியத் யூனியன் சார்பில் கூறப்பட்ட ஆலோசனையை அமெரிக்கப் பிரதிநிதி ஏற்றுக் கொண்டார். இந்த யோசனை சோவியத் பிரதிநிதி வாஸிலி குஸ்னெட்ஸோவால் நேற்று சபையில் தெரிவிக்கப்பட்டது. (ராய்ட்டர்)

## இன்றைய சினிமா

அரியலூர்: நடராஜா— அன்னையின் ஆணை
மதுரை: ஸ்ரீ லக்ஷ்மி— ராஜசேவை
" பரமேஸ்வரி— உலகம் சிரிக்கிறது
" ஸ்ரீ தேவி— மணிமேகலை
புதுக்கோட்டை: பழனியப்பா— "ராஜ சேவை"
சோமநூர்: குமார்— "ராமாயணம்"
சிவகாசி: கனகலக்ஷ்மி— வாழவைத்த தெய்வம்

## நடக்க இருப்பவை

**குடந்தையில் ஜீவா**

11-10-59 ஞாயிறு காலை 9 மணிக்கு குடந்தை அரசன் மண்டபத்தில் மு... ஆரம்பமாகும் "நல்ல இலக்கியமும்-தமிழ இலக்கியமும்" என்பது பற்றி தோழர் ப. ஜீவானந்தம் ('ஜனசக்தி ஆசிரியர்) சிறப்புச் சொற்பொழிவாற்றுவார்.

மாலை 6 மணிக்குப் பொதுக் கூட்டம். "விலைவாசி உயர்வும் இன்றைய அரசியலும்" என்பதுபற்றிப் பேசுவார்.

பாபிரெட்டிப்பட்டி: 11-10 59 ஞாயிறு அன்று அரூர் தாலூகா பாபிரெட்டிப்பட்டியில் நடைபெறும் கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக்கூட்டத்தில், கம்யூனிஸ்ட் கட்சி, கோவை ஜில்லாக் கவுன்சில் காரியதரிசி தோழர் கே. ரமணி, "இன்றைய அரசியல் நிலைமை" பற்றிப் பேசுவார்.

**திருச்சி தாலூகா விவசாயிகளின் பொது மகாநாடு**

11-10-59 ஞாயிறு மாலை 6 மணிக்கு திருவெறும்பூர் பஞ்சாயத்து மைதானத்தில் தோழர் எம். ஆறுமுகம் தலைமையில் நடைபெறும். மணலி கந்தசாமி, கே. அனந்த நம்பியார், வி. நாகு ஆகியோர் சொற்பொழிவாற்றுவர்.